# வேதாந்தவாரியரும்

# அண்ணங்கராரியரும்

वेदान्तसूरिसूक्त्यर्थतत्त्वं वेत्ति महीतले ।
अण्णङ्करार्य एकाकीत्येतदत्र स्फुटीकृतम् ॥


திருவல்லிக்கேணி
பண்டித. அ. மு. ஸ்ரீநிவாஸாசாரியர்
11, பேயாழ்வார் ஸன்னிதி வீதி



விஜய மிதுன ரேவதி.

ஸ்ரீ:

# வேதாந்தவாரியரும் அண்ணங்கராரியரும்

वेदान्तसूरिसूक्त्यर्थतत्त्वं वेत्ति महीतले।
अण्णङ्गरार्य एकाकीत्येतदत्र स्फुटीकृतम्॥

திருவல்லிக்கேணி
பண்டித. அ. மு. ஸ்ரீநிவாஸாசாரியர்
11, பேயாழ்வார் ஸந்நிதி வீதி

விஜய மிதுன ரேவதி.

    

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# வேதாந்தவாரியரும் அண்ணங்கராரியரும்

(பண்டித. அ. மு. ஸ்ரீநிவாஸாசாரியர், திருவல்லிக்கேணி)

---

1. "வேதாந்தவாரியரும் அண்ணங்கராரியரும்" என்று மகுடமிட்டு ஒரு வியாஸமோ நூலோ எழுதவேணுமென்கிற அபிலாஷை அடியேனுக்கு அநேக வருஷங்களாக இருந்தது. வேதாந்ததேசிகனுடைய க்ரந்தங்களையெல்லாம் ஒரு மாலையாக அண்ணங்கராசார்யர் அச்சிட ஆரம்பித்தபோது, ஒன்றுக்கு முதவாத அடியேனையும் அக்காரியத்தில் துணைகொண்டார். முப்பத்தைந்து வருஷங்களுக்கு மேலாகவே அண்ணங்கராசார்யருடைய பழக்கம் அடியேனுக்கிருந்தாலும், யேலே குறித்த க்ரந்தமாலையை அச்சிட ஆரம்பித்தபிறகு அதிகமாக நெருங்கிப்பழக அவகாசம்கிடைத்தது. அப்போது ப்ரூப் பார்க்கும் பொறுப்பு பெரும்பாலும் என்னுடையதாயிருந்தது. பாரங்களை அச்சிடுவதற்குமுன்பு கடைசியாக ப்ரூப் பார்க்கிறவொரு பொறுப்பு அண்ணங்கராசார்யருடையதாயிருந்தது. அந்த ஸமயத்தில் அவர் செய்கிற சோதனங்களை அடியேன் கவனித்து வரும்போது "தேசிகனுடைய க்ரந்தங்களில் இவருக்கு இவ்வளவு அவகாஹனம் எப்படி ஏற்பட்டது? எப்போது ஏற்பட்டது? எதற்காக ஏற்பட்டது?" என்று சிந்தித்து உள்ளத்தினுள்ளேயே ஆச்சரியப்படுவதுண்டு. சிலஸமயங்களில் இதைப்பற்றி வாய்திறந்து அவரையே கேட்பதுமுண்டடியேன். அதற்கு மந்தஸ்மிதந்தான் உத்தரமாகக் கிடைக்கும்.

2. திருவல்லிக்கேணியில் கவிபூஷணரென்று ப்ரஸித்தராயெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் அத்தங்கி ஸ்வாமியிடத்தில் அடிக்கடி சில வித்வான்கள் வருவதுண்டு. அவர்களில் பெரும்பாலும் தேசிக க்ரந்தங்களில் விசேஷ பரிசயமுடையவர்களிருப்பார்கள். அவர்களிடத்தில் தோன்றாத விஸ்மயம் அடியேனுக்கு அண்ணங்கராசார்யரிடத்தில் நெருங்கிப் பழகும்போது சதசாகமாகத் தோன்றினதுண்டு. அப்போதே இந்த நூல் எழுத அதிமாத்ரம் மநோரதித்-

தேன். எதற்கும் எம்பெருமான் ஸங்கல்பிக்கிற ஒருகால விசேஷ முண்டே. அந்தகாலம் இப்போதுதான் வாய்க்கின்றது. 1939-ஆம் வருஷத்திலிருந்து அண்ணங்கராசார்யருடைய க்ரந்தங்கள் சென்னையில் அச்சிடப்படுமவையெல்லாம் ப்ரூப்பார்க்கிற முறையில் அனேகமாய் அடியேனுக்கு எட்டியே இரும். நடந்த 13 வருஷ காலத்தில் இடையில் ஒருநாள்கூட விச்சேதியாமல் நாள்தோறும் இவருடைய க்ரந்தங்களைப் பார்த்துவர நேர்ந்ததனாலும் இந்த நூலை அவசியம் எழுதியே முடிக்க தீவ்ரமான ஆசை கிளர்ந்தது. எம்பெருமான் ஸாக்ஷியாகவும் எம்பெருமானார் முதலான ஆசாரியர்கள் ஸாக்ஷியாகவும் என்மனத்தில் உள்ளபடி தோன்றின விஷயங்களையே இதில் எழுதுகின்றேன். மத்யஸ்த த்ருஷ்டியோடு பார்ப்பவர்களுக்கு இந்தநூல் மிகவும் ருசிக்கும். வேதாந்ததேசிகருடைய க்ரந்தங்களாகிற கடலில் அண்ணங்கரார்யர் ஆழ்ந்து எடுத்துக்காட்டினவைகளும் வித்வான்களுடையகழுத்தில் எப்போதும் ஹாரமாக விளங்கக்கூடியவைகளுமான ரத்னங்களையே இந்நூலில் பதியவைக்கிறேன். இதற்குத் தகுதியாகவே நூலுக்குப் பெயர் இடப்பட்டது. தவிரவும், வேதாந்தவாரியர் பலதுறைகளில் பலவகையான க்ரந்தங்களை இயற்றினவர் என்பது ப்ரஸித்தமானவிஷயம். அதுபோலவும், அதைவிட நாலைந்துமடங்கு அதிகமாகவும் அண்ணங்கராசாரியருடைய க்ரந்தங்கள் இதுவரையில் அவதரித்திருக்கின்றன. இன்னமும் அவதரித்துக்கொண்டே யிருக்கின்றன. “ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யசஸ்விந:” என்கிற கணக்கிலே பக்தவர்க்கங்கள் ஆங்காங்கு கோருகிறபடி அண்ணங்கராசார்யருக்குவாழ்நாள் அபிவிருத்திபெற்று விளங்குமாகில் இவருடைய க்ரந்தங்கள் ஆயிரக்கணக்கில் ஏறுமென்பதில்ஸந்தேஹமில்லை. இதையுட்கொண்டும் இந்நூலுக்கு நாம் இட்ட பெயர் மிகப்பொருந்தும். எங்குமே பண்டிதர்கள் கூடுமிடங்களில் பரஸ்பரம் பேசிக்கொள்வது ஒன்றுண்டு:—“அண்ணங்கராசார்யர் இதுவரையில் பத்ரிகைகளாகவும் வியாஸங்களாகவும் வியாக்கியானங்களாகவும் ஒரு பாஷையிலன்றிக்கே நாலு பாஷைகளில் வெளியிட்டிருக்கிறவைகளை ஒருவர் ஒரு புருஷாயுஸ்ஸில் அக்ஷரராசிகளைமாத்திரம் வாசிப்பதென்று ஆரம்பித்தாலும் வாசித்துத் தலைக்கட்ட முடியாதுபோலிருக்கிறதே” என்று. வாஸ்தவத்தில் இது அதிவாதமன்று. உண்மையுரை. எந்தவூரிலும் எந்த இடத்திலும் யாருடைய கையிலும் அண்ணங்

கராசாரியருடைய க்ருதிகளே காணப்படுகின்ற தென்பதில் யாருக்கு என்ன விவாதமிருக்கமுடியும்? வேதாந்தவாரியருடைய க்ரந்தங்கள் அதிகமா? அண்ணங்கராசார்யருடைய க்ரந்தங்கள் அதிகமா? என்கிற விசாரத்தை எழெட்டு வருஷங்களுக்குமுன்பு செய்திருந்தால் 'இரண்டும் ஸரிஸமமாகத்தானிருக்கும்' என்று சொல்லக்கூடும். இப்போது அந்த விசாரம் செய்வதற்கு ப்ரஸக்தியேயில்லை. ஒவ்வொரு பாஷையிலும் எல்லைகடந்து போய்க்கொண்டிருக்கிறதே.

3. ஸ்தோத்ர க்ரந்தங்களாகவும் விமர்சக்ரந்தங்களாகவும் வியாக்கியானங்களாகவும் பரமத நிராஸங்களாகவும் ஸம்ப்ரதாயார்த்த விவேசனங்களாகவும் பத்யக்ருதிகளாகவும் கத்யக்ருதிகளாகவும் உபயமிச்ரங்களாகவும் தமிழ்வசனங்களாகவும் தமிழ்ப் பாசுரங்களாகவும் ஸம்ஸ்க்ருத வசனங்களாகவும் ஸம்ஸ்க்ருத ச்லோகங்களாகவும் இயற்றுவதில் இவ்விருவரும் பரஸ்பரம் ஒத்திருக்கிறார்களென்பதில் ஒருவர்க்கும் விவாதமிராது. அதுவன்றியும், வேதாந்தவாரியருடைய க்ரந்தங்களை யெல்லாம் ஒன்று விடாமல் பூர்த்தியாகப் பார்த்தும், பலதடவை பார்த்தும் அவற்றின் வியாக்கியானங்களையுங்கூட மனனம் பண்ணியுமிருப்பவர் கடல் சூழ்ந்த இம்மண்ணுலகில் அண்ணங்கராசாரியர் ஒருவரே யென்றால் இதிலும் ஒருவர்க்கும் விவாதமிராது. அண்ணங்கராசாரியருடைய மற்றக்ரந்தங்ளெல்லாமொருபுற மிருக்கட்டும். திவ்யப்ரபந்தம் நாலாயிரத்திற்கும் ஸம்ஸ்க்ருதவியாக்கியான மெழுதி வெளியிட்டு வருகிறாரே, இது அதிமாநுஷக்ருத்யமல்லவா? மற்றையோருடைய சிந்தைக்கும் கோசரமன்றேயிது. "बोद्धारो मत्सरग्रस्ताः....अबोधोपहताश्चान्ये" என்றது இவ்விஷயத்திற்குத் தாஞெக்கும். மற்றையோருடைய ஸகலக்ரந்தங்களையும் ஒரு தட்டில் வைத்து இந்த திவ்ய ப்ரபந்த ஸம்ஸ்க்ருத நூல்களை மற்றொரு தட்டில் வைத்துப் பார்க்கலாமே. நிற்க.

4. அண்ணங்கராசார்யருடைய நூல்களிலும் வியாஸங்களிலும் வேதாந்தவாரியருடைய க்ரந்தங்களிலிருந்து எத்தனை விஷயங்களுக்கு எத்தனை மேற்கோள்கள் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றனவென்று ஆராயுமளவில் இது கணக்கிடமுடியாத விஷயம். அபரிமிதம், அப்ரமேயம் என்னலாமே தவிர வேறொன்றும் சொல்ல முடியாது. தேசிக பக்தர்களான வித்வான்கள் யாவரும் இதை உள்ளபடி அறிந்தேயிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் ஸ்வ

கோஷ்டிகளில் என்ன சொல்லிக்கொள்ளுகிருர்களென்ருல், " அண்ணங்கராசார்யருக்கு தேசிகஸம்பிரதாயத்தைக் கண்டிப்பதிலேயே த்ருஷ்டி ; இதற்காகவே இரவும் பகலும் தேசிக க்ரந்தங்களை கண்குத்திப் பாம்புபோல் கண்டு வருகிருர் ; தேசிகஸூக்திகளுக்குத் தம்முடைய இஷ்டம்போல் அர்த்தம் செய்வதும் அதையே ஸ்தாபிப்பதுமாய் இருந்து வருகிருர் " என்று சொல்லிக்கொண்டு ஒருவாறு த்ருப்தியடைந்து வருகிருர்கள். ஸ்ரீமத் பரமஹம்ஸ. மைஸூர் பரகாலஸ்வாமி போன்ற ப்ராமாணிக ப்ராஜ்ஞ பரிப்ருடர்கள் இவ்விதமாக எண்ணுவதுமில்லை, சொல்லுவதுமில்லை. 'அண்ணங்கராசார்யர் ப்ரதிவாதிபயங்கராசார்ய வம்சத்தில் ஜனிக்கப் பெற்றவராகையாலே தேசிகஸ்ரீஸூக்திகள் அவருக்கு வாசோவிதேயங்களாயிருப்பதும், அவற்றின் உண்மையான அர்த்தங்கள் அவருக்கே ஸ்புரிக்கப் பெறுவதும் ப்ராப்தம்' என்றுதான் பிராமாணிகர் சொல்லுவது. இவ்விஷயத்திற்கு நூற்றுக்கணக்கான த்ருஷ்டாந்தங்கள் காட்டமுடியும். ஆனாலும் இங்குச் சிலவே காட்டுகிறேன்.

5. பல நாள்களுக்குமுன்பு ஒரு ஸம்வத்ஸரம் நாங்களிருவரும் திருநாராயணபுரத்தில் எம்பெருமானருத்ஸவம் ஸேவிக்கப் போயிருந்தோம். அங்கு திருநக்ஷத்ர தினத்தன்று நடைபெறும் மஹாஸபையில் மைஸூரிலிருந்து மஹாமஹோபாத்யாய. பண்டிதரத்நம். லக்ஷ்மீபுரம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி அக்ராஸநாதிபதியாக வெழுந்தருளி உபந்யஸிக்கையில் யதிராஜஸப்ததியில் " यथाभूतस्वार्थी यतिनृपतिसूक्तिर्विजयते " என்னும் ச்லோகத்தை யெடுத்துக்கொண்டு பத்தெட்டு நிமிஷம் ச்லோகார்த்தத்தை யதாச்ருதமாகச் சொல்லி முடித்து, ஏதாவது உபந்யஸிக்கும்படி நம் அண்ணங்கராசாரியரை வேண்டினர். இவர் அந்த ச்லோகத்தையே யெடுத்துக்கொண்டு இரண்டுமணி காலத்திற்குமேல் உபந்யஸித்தார். அந்த ச்லோகத்தின் உத்தரார்த்தத்தில் "कथककुलकोलाहलहतत्रिवेदीनिर्वेदप्रशमनविनोद-प्रणयिनी " என்றவிடத்தில் த்ரிவேதீ என்பதற்கு ருக்யஜுஸ்ஸாமங்களாகிற வேதத்ரயமென்று லக்ஷ்மீபுரம் ஸ்வாமி பொருள் சொல்லியிருந்தார். நம் ஸ்வாமி " அதற்கு அதுவன்று பொருள்; பேதச்ருதி அபேதச்ருதி அந்தர்யாமிச்ருதி ஆகிற இம்மூன்று ச்ருதிகளின் ஸமாஹாரமே இங்கு த்ரிவேதி யெனப்படுகிறது " என்று

சொல்லி "मिथो भेदं तत्त्वेष्वभिलपति भेदश्रुतिरथो विशिष्टैक्यादैक्यश्रुतिरपि च सार्था भगवती। इमावर्थौ गोप्तुं निखिलजगदन्तर्यमयिता निरीशो लक्ष्मीशः श्रुतिभिरपराभिः प्रणिदधे ॥" என்கிற ஸங்கல்ப ஸூர்யோதய ச்லோகத்தையுங் கொண்டு ஸமந்வயப்படுத்தி ரஸவத்தரமாகப் பேசினார். அப்போது அந்த லக்ஷ்மீபுரம் ஸ்வாமி மாத்திரமேயன்று, மைஸூரிலிருந்து அவரோடு கூட வந்திருந்த மற்றும் பல வித்வான்களும் திருநாராயணபுரத்து வித்வான்களும் இவ்வர்த்தத்திற்கு உள்ளமுருகி "த்ரிவேதீநிர்வேதப்ரசமநவிநோதப்ரணயிநீ" என்றருளிச்செய்த ஸ்வாமிக்கு இதுதான் அபிமதமான அர்த்தமென்றும் இவ்வர்த்தம் ப்ரதிவாதி பயங்கர ஸ்வாமி தவிர வேறொருவர்க்கும் ஸ்புரிக்கமாட்டாதென்றும் அந்த மஹாஸபையில் கோஷித்தார்கள். அத்வைதிகள் பேத ச்ருதிகளுக்கு நிர்வேதத்தை யுண்டுபண்ணினார்கள். த்வைதிகள் அபேத ச்ருதிகளுக்கு நிர்வேதத்தை யுண்டு பண்ணினார்கள். இவ்விரு வகுப்பினரும் சேர்ந்து [घटकश्रुतिகளெனப்படுகிற] அந்தர்யாமி ச்ருதிகளுக்கு அதிமாத்ரம் நிர்வேதத்தை யுண்டுபண்ணினார்கள். விசிஷ்டாத்வைத ஸித்தாந்த நிர்த்தாரண துரந்தரரான ஸ்வாமியெம்பெருமானார் மேற்சொன்ன மூவகை ச்ருதிகளையும் ஸமரூபமாக ஆதரிப்பவராகையாலே ஒரு ச்ருதிக்கும் நிர்வேதமுண்டாகாதபடி செய்தருளி, மதாந்தரஸ்தர்களால் உண்டாக்கப்பட்டிருந்த த்ரிவேதீ நிர்வேதத்தை அறவே யொழித்தருளினாரென்று நம்ஸ்வாமி விவரித்துக் காட்டின பொருள் ஒருவரிடத்திலும் கேட்டதில்லையென்று மிகவுகந்தார்கள்.

6. தோணுங்குளம் ராமாநுஜாசாரியரென்பவர் காஞ்சீபுரம் தேவப்பெருமாள் ஸந்நிதிக்கு ரிஸீவராயிருந்தபோது நூற்றுக்கால் மண்டபத்தில் ஒரு **வித்வத்** ஸபை கூட்டினார். அதில் "त्वत्तेजसि द्विरदशैलपते विमृष्टे श्लाघ्येत संतमसपर्व सहस्रभानोः" என்கிற வரதராஜ பஞ்சாசத்திலுள்ள ச்லோகத்தை அவர் எடுத்துரைத்து இதன் தாத்பரியத்தை விளங்கச் சொல்லவேணுமென்று வித்வான்களை ப்ரத்யேகம் கேட்டுக்கொண்டார். 'தேவப் பெருமாளே! உம்முடைய தேஜஸ்ஸை விமர்சித்தால் ஸூர்யனைக் காட்டிலும் அமாவாஸ்யை மிகச் சிறந்ததாகக் கொள்ளப்படும் என்று மூலமுள்ளது. ஸூர்யனுக்கு என்ன தாழ்வு? அமாவாஸ்யைக்கு என்ன

ஏற்றம்? இதைச் சொல்லவேணும் என்று அவர் கேட்டிருந்தார். ஒவ்வொரு பண்டிதரும் 'விமர்சிக்கவேணும், வியாக்கியானம் பார்க்கவேணும், தேசிக திவ்ய ஸூக்தியல்லவா? அவ்வளவு லேசாக அர்த்தமாய்விடுமா?' என்று ஓரோவிதமாகச் சொல்லி நின்றார்கள். அப்போது நம் ஸ்வாமி [வித்யார்த்தி தசையிலிருந்தவர்] உடனேயெழுந்து ச்லோகத்தைப் பூர்த்தியாகச் சொல்லி சப்தார்த்த தாத்பர்யார்த்த விசேஷார்த்தங்களை விரிவாகச் சொல்லி விசேஷ ஸன்மானம் பெற்றாரென்பது அக்காலத்தில் எங்கும்பெருமையாகச் சொல்லப்பட்டு வந்தது. [இவர் பணித்த அர்த்தம் இவருடைய வியாக்கியானத்திலே விசதம்.] இது நாற்பது வருஷங்களுக்கு முன்பு நடந்த செய்தி. மேலே சொன்ன இரண்டு விஷயங்களும் கர்ண பரம்பரையிலேயே நிற்பது, க்ரந்தங்களில் ஏறியதன்று என்று நினைக்கிறேன்; இனி க்ரந்தாரூடங்களான பல விஷயங்களை யெடுத்துச் சொல்லுகிறேன்.

7. "एकयैव गुरोर्दृष्ट्या द्वाभ्यां वाऽपि लभेत यत् । न तत्तिसृभिरष्टाभिस्सहस्रेणापि कस्यचित् ॥" என்பது வேதாந்தவாரியருடைய ஸுபாஷிதநீவியிலுள்ளவொரு ச்லோகம். இதற்கு திருச்சி, ஏ. வி. கோபாலாசாரியர் ஸ்வாமி அர்த்தம் எழுதி வெளியிட்டார்—ஆசாரியனுடைய உட்கண்ணாகிய ஒரு கண்ணாலோ வெளிக்கண்ணாகிய இரண்டு கண்களாலோ அடையக்கூடிய பேற்றை சிவனுடைய மூக்கண்களாலும், பிரமனுடைய எட்டுக் கண்களாலும் இந்திரனுடைய ஆயிரங்கண்களாலும் அடையமுடியாது—என்று. இதைக் கண்டவுடனே அண்ணங்கராசாரியர் எழுதினார்-இந்திரன் ஆயிரங்கண்ணனென்று ப்ரஸித்தி யுடையவனாயினும் இந்த ஸ்தலத்தில் இந்திரனை ஸ்மரிக்க நியாயமில்லை. ப்ரக்ருதச்லோகத்தில் ஜ்ஞானவிகாஸத்தை யுண்டுபண்ணுவது விஷயம். சதுர்முகப்ரஹ்மா ஸரஸ்வதீவல்லபனாய் நான்கு வேதங்களையும் கரைகண்டவனாகையாலே ஜ்ஞானவிகாஸனத்தில் அவனுக்கு ப்ரஸக்தியுண்டு; பரமசிவன் ஸர்வஜ்ஞனென்று பேர்பெற்றவனாகையாலும், "ईशानात् ज्ञानमन्विच्छेत्" என்று சொல்லப்பட்டவனாகையாலும், நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "நுண்ணுணர்வின் நீலார்கண்டத்தம்மான்" என்று ஞானச்சிறப்பைக் காட்டி அருளிச்செய்திருக்கையாலும் அவனுக்கும் ஜ்ஞாநவிகாஸனத்தில் ப்ரஸக்தி உண்டு. இந்த பத்தகியில் இந்தி

ரன் நினைவுக்கு வரவும் ப்ரஸக்தியே கிடையாது. மேலும் இங்கே சிவனை முன்னே சொல்லி, அவனிலும் மேம்பட்ட பிரமனை அதற்கடுத்தபடியாகச் சொல்லி, இவ்விருவர்களிலும் தண்ணியனை இந்திரனை அதன்பிறகு சொல்ல ஔசித்யமுமில்லை. ஆகவே, "ஸஹஸ்ரசீர்ஷாபுருஷ: ஸஹஸ்ராக்ஷ:" என்று புருஷஸூக்தத்திலும், "தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க் கண்களாயிரத்தாய்" என்று திருவாய்மொழியிலும் ஆயிரம் திருக்கண்களையுடையவனுகச் சொல்லப்பட்ட ஸ்ரீமந் நாராயணனே இங்குப் பொருளாகத் தகும். ஆசார்யனுடைய கடாக்ஷத்தாலே உண்டாகும்பேறு திரிமூர்த்திகளின் கடாக்ஷத்தாலு முண்டாகாது என்று சொல்லுவதே இங்கு வக்தாவுக்கு உத்தேச்யமானது; இது தான் ரஸவத்தரம்—என்று அண்ணங்கராசார்யர் வெகு விரிவாக எழுதி வெளியிட்டார். இதை அந்த கோபாலாசார்யஸ்வாமி கடாக்ஷித்து ப்ராமாணிகராகையாலே உள்ளமுருகி "இப்படி உண்மையான அர்த்தம் ப்ரதிவாதி பயங்கர குலதிலகருக்கன்றி வேறு யாருக்கு ஸ்புரிக்கும்!" என்றுசொல்லி வைகுண்ட ஏகாதசியன்று ஸ்ரீரங்கம் ஆயிரக்கால் மண்டபத்தருகில் ஆயிரம் பேரெதிரில் ஸ்வாமியைத் தழுவிக்கொண்டு ஆனந்தபாஷ்பம் பெருக்கினரென்பதை அப்போது பத்ரிகைகளில் வாசித்திருக்கிறோம். 'தேசிக பக்தர்களான வித்வான்கள் பல பேர்களிருந்தும் ஒருவரும் இதைக் கண்டு பிடித்துத் தெரிவிக்கலில்லையே' என்றும் வருந்தினராம் அந்த கோபாலாசார்யர். இது பல வருஷங்களுக்குமுன்பு நிகழ்ந்தது.

8. அந்த (கோபாலாசார்) ஸ்வாமி ஞானத்திலும் சீலத்திலும் வயதிலும் அதிமாத்ரம் வ்ருத்தராகையாலே அந்தஸ்வாமியீடுபட்ட ஸமீப காலத்து நிகழ்ச்சிகளான இன்னும் சில விஷயங்களையும் வித்வான்களுக்கு ஞாபகமூட்டுகிறேன். அந்த ஸ்வாமி சென்ற புரட்டாசி மாதத்தில் வெளிவந்த ஆசார்ய ஜயந்திமலரென்னும் ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையில் "**தேசிக காவியங்களின் ஸர்வரஞ்ஜகத்வம்**" என்றொரு வியாஸம் வெளியிட்டார். அதில், ஹம்ஸஸந்தேச காவ்யத்திலிருந்து (1—49) "नित्यावासं वृषभमचलं सुन्दराख्यस्य विष्णोः ........ पाथो दिव्यं पशुपतिजटास्पर्शशून्यं विभाति" என்கிற ச்லோகத்தையுதாஹரித்து இதற்குத் தாத்பர்ய மெழுதினர். திருமாலிருஞ்சோலை

மலையில் பெருகும் நூபுரகங்கையானது அழகருடைய திருவடிச் சிலம்புகளிலிருந்து வருகின்ற கங்கையேயானாலும் பகவானுன பசுபதியினுடைய சிரஸ்ஸ்பர்சமாகிற சுத்தியேற்றம் இதற்கில்லையென்று தேசிகன் நூபுர கங்கையினுடைய நிவ்நதையைப் பேசுகிருர் என்று. இவ்விதமான அர்த்தந்தான் (ப்ராசிந) ஸ்ரீபரகாலஸ்வாமியினுடைய ரஸாஸ்வாதிநியென்கிற வியாக்கியானத்திலுமுள்ளதாகவும் எழுதினர். தேசிகனுடைய ஸூக்திக்கு இதுதான் யதாவஸ்திதமான அர்த்தமென்று இந்த ஸ்வாமி அபிப்ராயப்பட்டதுமாத்திரமேயன்றிக்கே ஸ்ரீமதஹோபில மடாதிபதி ஸ்வாமிகளும் மடத்து வித்வான்களும் இதையே பரமார்த்தமாக நினைத்து தங்கள் பத்ரிகையில் இதை ஆதரித்து அச்சிட்டு உலகம் பரவ வெளியிட்டு விட்டார்கள்.

9. இதை அண்ணங்கராசார்யர் விமர்சிக்க எழுந்தார். அவர் ஆர அமர விமர்சித்து எழுதியிருப்பதாவது :—

* **நித்யாவாஸ**மென்று தொடங்கியுள்ள ஹம்ஸ ஸந்தேச ச்லோகமானது தாதுவிடப்படுகிற ஹம்ஸத்தை நோக்கித் திருமாலிருஞ்சோலையழகரை வழியிடையில் ஸேவிக்குமாறு கூறப்படுகிறது. அங்குப் பெருகுகிற சிலம்பாறென்கிற நூபுர கங்கையானது ஒன்ருன கங்கையிற் காட்டிலும் புனிதமானதென்று கொண்டாடப்படுகிறது. கங்கைக்கு பசுபதி ஜடாஸ்பர்சமாகிற ஒரு குறையுண்டு; நூபுர கங்கைக்கு அக்குறைதானும் கிடையாதென்று புகழ்ச்சியே இங்குள்ளது. ச்லோகத்திலிருந்து இப்பொருள் ச்ரமப்பட்டு அறியக்கூடியதன்று; அநாயாஸமாக அறியக் கிடக்கும் பொருள் இதுவே. 'இந்த நூபுர கங்கையானது எம்பெருமானுடைய திருவடியினின்று பெருகுகின்ற கங்கையேயாயினும் பரமசிவனுடைய சிரஸ்ஸம்பந்தம் பெருதபடியினலே சுத்தியோகம் சூந்யமாகப்பெறறது' என்று ஒரு பெரிய குறையையேற்றி தேசிகன் இந்த ச்லோகம் பணித்திருப்பதாக எழுதுவது மிகவும் அஸங்கதம். எம்பெருமானுடைய ஸ்ரீபாத தீர்த்தமான கங்கைக்கு பசுபதியின் சிரஸ் ஸம்பந்தத்தினல் சுத்தி ஏற்பட்டதாகவும் அது கங்கைக்கு ஓர் ஏற்றமாகவும் காட்டி அப்படிப்பட்ட ஏற்றம் நூபுர கங்கைக்கு இல்லையென்று இங்கே குறைகூறப்படுகிறதாக பொருள் விவரிப்பது ஸ்ரீ வைஷ்ணவ ப்ருந்தத்தில் ஒருவராலும் ஏற்கத்தக்கதாகாது.

தேசிக திவ்ய ஸூக்திக்கு இது நேர் விபரீதமுமாகும். தேசிகனுடைய தேஹளீச ஸ்துதியில் 12, 13 ஆம் ச்லோகங்களை யநுஸந்தித்தால் இப்பொருள் அஸங்கதமென்று எளிதாக அறுதியிடலாகும். * सत्कुर्वतां तव पदं चतुराननत्वे पादोदकं च शिरसा वहतां शिवत्वम् * என்றும், * पादसरोजतस्ते मन्दाकिनी विगलिता मकरन्दधारा....पुण्या बभूव पुरशासनमौलिमाला * என்றும் அந்த க்ரந்தத்திலுள்ளதன்றோ. வரதராஜபஞ்சாசத்திலும் * विमलेन यस्य पादोदकेन विधृतेन शिवा भवन्ति * என்று சமத்காரமாகவும் அருளிச்செய்தார். இவற்றுக்கெல்லாம் சிகரமாக ஸ்தோத்ர பாஷ்யத்தில் * कस्य पादोदकेन स शिवः स्वशिरोधृतेन * என்றவிடத்தில் அபார்த்த நிரஸந பூர்வகமாகவும் யதார்த்தமான பொருள் நிலை நாட்டப்பட்டிருக்கிறது. அங்கு முடிவான ஸ்ரீ ஸூக்தி 'अत एव. * हरस्य गात्रसंस्पर्शात्पवित्रत्वमुपागता * इत्यत्रापि हरस्य शुद्धिप्रदत्वमुपागतेति बोद्धव्यम्" என்றுள்ளது. ஸ்ரீ பரகால ஸ்வாமியின் ரஸாஸ்வாதிநியில் வேறு விதமாகப் பொருள் செய்யப்பட்டிருப்பதாக எழுதினதும் தவறு. கங்கையிற் காட்டிலும் நூபுர கங்கைக்கு மிகுந்த ஏற்றமுண்டென்பதையே அந்த வ்யாக்யாதாவும் விரிவாக எழுதியிருக்கிறார் என்று அண்ணங்கராசார்யர் விபுல நிரூபணம்செய்து எழுதி வெளியிட்ட பின்பு அந்த கோபாலாசார்யஸ்வாமி க்ஷாமண பத்ரிகையெழுதிக் கொண்டார் (அதாவது)—"ஸ்வாமியினுடைய நிரதிசயப்ரேமாவிஷ்காரங்களால் அளவுகடந்த ஆனந்தமடைகிறேன். ஹம்ஸஸந்தேச ச்லோகத்தைப்பற்றி அனேக வருஷங்களுக்குமுந்தி ஸேவித்திருந்த ஞாபகங்களைமட்டும் கொண்டு க்ரந்தத்தை இப்போது பார்க்காமல் எழுதியதில் தவறுதல் நேர்ந்தது. அதற்கு க்ஷமையை அடியேன் ப்ரார்த்திக்க வேண்டியதே" என்று (6-11-52ல்) க்ஷாமணபத்ரிகை யெழுதிக்கொண்டதும் பத்ரிகைகளில் வாசிக்கப்பட்டது. இவ்விஷயம் அம்ருத லஹரி 111லும், ஸ்ரீராமாநுஜன் 47லும் விசதமாகக் காணக்கூடியது.

10. அதிகரணஸாராவளியில் ஒரு விஷயம்: இதைச் சிறு விஷயமென்றும் நினைக்கலாம், மிகப்பெரிய விஷயமென்றும் நினைக்கலாம். इह, इति என்கிற இரண்டு லகுவான அக்ஷரங்களைப் பற்றினதாகையாலே சிறிதென்று நினைக்கலாம். இதை ஆராய்ந்தது மஹாமேதையின் காரியமாகையாலே மிகப்பெரிதென்று

நினைக்கலாம். இவ்விஷயத்தில் அண்ணங்கராசார்யருடைய பங்க்திகளை அப்படியே எடுத்தெழுதுகிறேன்—(ஸ்ரீராமாநுஜன்—45 லிருந்து)—"ந்ருஸிம்ஹப்ரியா ஸமீக்ஷா" என்கிற நீண்டதோர் வியாஸத்தின் ஒருபகுதி:—

"இந்த ப்ரஸங்கத்தில் யாத்ருச்சிகமாக இவர்களுக்கு ஒரு நிதி கிடைக்கிறது: அதை இவர்கள் பெற்று மகிழ்வது நலம். பல வருஷங்களுக்கு முன்பு (அதாவது) மஹர்ஷி வாஸு தேவாசார்யஸ்வாமி வேதாந்ததீபிகைக்கு ஆசிரியராயிருந்தகாலத்தில் அதிகரணஸாராவளிக்கு ஒரு மணிப்ரவாள வியாக்கியான மெழுதித்தரவேணுமென்றும், அதைத் தாம் வேதாந்த தீபிகையில் வெளியிட்டு ஆனந்திக்கப்பெறவேணுமென்றும் அடியேனுக்குத் தெரிவித்திருந்தார். அப்படியே அடியேன் எழுதியனுப்பிக் கொண்டிருந்தேன். அது வேதாந்த தீபிகையின் சில ஸஞ்சிகைகளில் அச்சாகிவந்தது. [பிறகு சிலருடைய மாச்சரியத்தினால் அந்த ப்ரகாசநம் நிறுத்தப்பட்டு நின்றது—என்பது நிற்க.] நாம் அந்த வியாக்கியான மெழுதுகையில் * வ்ருத்திக்ரந்தேது ஜைமிந்யுபரசிததயா.* (15.) என்கிற ச்லோகத்தின் நாலாவது பாதம் *निर्वाहस्तूपचारात् कचिदिह घटते ह्येकतात्पर्ययोग: * என்றிருப்பதில் அநுபபத்தி சங்கை தோன்றிற்று. இஹ என்பது மூன்றாவது பாதத்திலேயே யிருக்கிறது; அது மறுபடியும் நான்காவது பாதத்தில் இருக்கச் சிறிதும் அவசியமில்லை. அநாவச்யகத்வம் மாத்திரமேயன்று; அந்வயிக்கவும் மாட்டாது. इति घटते ह्येकतात्पर्ययोग: என்று பாடமிருந்தால் நன்கு பொருந்துகிறது. இப்படித்தான் பாடமிருந்திருக்கும்; அச்சுப்பிழையாக இஹ என்று விழுந்திருக்கும்; ஆனாலும் ஸஹஸா நாம் திருத்திவிடத்தகாது; பெரியார்களைக் கேட்போம்—என்றெண்ணிப் பல பெரியார்களிடம் விஜ்ஞாபித்துக் கொண்டேன். इह என்பதை யடித்து इति யென்றே திருப்புட்குழிஸ்வாமி திருக்கையால் திருத்தியிருந்த அச்சுப்புத்தகத்தையும் திருத்தமாகவே எழுதப்பட்டிருந்த ஓலை ஸ்ரீகோசங்களிரண்டையும் ஸேவிக்க நேர்ந்தது. அப்போது அடியேன்கொண்ட ஆனந்தத்திற்கு அளவில்லை. அதே ஸமயத்தில், திருக்குடந்தையில் ராயம்பேட்டை கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி அதிகரணஸாராவளியை (ஸுந்தரராசார்ய?) வியாக்கியானத்தோடு சுத்தப் பதிப்பாக அச்சிடுவதாய் ப்ரசுரஞ் செய்து சில பாரங்களையச்சிட்டு மாதிரிக்காப்பியாக ப்ரகாசனம் செய்திருந்தார். அதில் இந்த * வ்ருத்திக்ரந்தேது ச்லோகமும் அடங்கியிருந்தது. அதிலும் (இஹ கடதே) என்கிற அபத்த பாடமே யிருந்தது. அப்போது அந்த R. V. K. ஸ்வாமி எம்மோடு ஸௌஹார்தத்தை விட்டு மாறுபட்டிருந்த ஸமயமாதலால் அவருடைய தவறுகளை எடுத்துக்காட்டிப் பல ப்ரசுரங்களை நாம் செய்த அடைவிலே (இஹ கடதே) என்னுமிந்தத் தவறையும் எடுத்துக்காட்டி இது தவறுதானென்பதை விரிவாக நிரூபித்தும் எழுதிப் பத்திரிகையில் வெளியிட்டோம். அதைக் கடாக்ஷித்த அந்த மஹாமஹோபாத்யாயர் உண்மையில் மஹா விவேகியாகையால் உள்ளம்பூரித்து 'இப்படிப்பட்ட மஹோபகாரம் வேறு யாரால் செய்யமுடியும்? தேசிகனைத் தாங்குகிற வித்வான்கள் நாங்களே என்று வீணாகக் கொக்கரிக்கின்ற வித்வான்களில் ஒருவர்கூட இந்த ஸூக்ஷ்மமான தவறை எடுத்துக்காட்ட சக்தரல்லர்'......இத்யாதியாக விரிவாயெழுதி நீண்ட ஸ்ரீமுகமநுக்ரஹித்து, இடையில் ஏறிட்டுக்கொண்டிருந்த மாத்ஸர்யத்தை அறவே விட்டுப் பழைய ஸௌஹார்த்தத்தை முன்னிலும் அதிசயிதமாக்கிக்கொண்டார். இது ஜகத்விக்க்யாதமான விஷயம். அதன் பிறகு நாம் ஸ்ரீதேசிகக்ரந்தமாலை யச்சிட்டபோது (இதி கடதே)

என்கிற ஸாதுபாடத்தையே வெளியிட்டோம். அந்த ஸமயத்தில் ஸ்ரீ மதஹோபில மடத்தின் மூலமாக அதிகரண ஸாராவளி இரண்டு வியாக்யானங்களோடு கூட வெகு அழகாகப் பதிப்பிக்கப்பட்டு வந்தது. தர்முத்ராண நிர்வாஹகர்களுக்கும் அந்த R. V. கிருஷ்ணமாசார்யஸ்வாமியே இந்த ஸாது பாடத்தைத் தெரிவித்து அதிலும் இப்பாடமே வெளிவரும்படி செய்திருக்கிறார் 1939 வருஷத்தில். இவ்வளவு நடந்திருந்தும் இப்போது ந்ருஸிம்ஹப்ரியையானது ஸாமரஸ்யாவகாஹந வியாஸத்தின் தொடக்கத்திலேயே 'क्वचिदिह घटते என்று பழைய அபத்த பாடத்தையே ப்ரசுரம் செய்திருக்கிறது. ஜாகரூகர்களாயிருந்து நிர்வஹிக்கக்கூடிய திறமைபெற்ற மஹா பண்டிதர்களைக் கொண்டு ந்ருஸிம்ஹப்ரியையை அநவத்யகந்தமாக வெளியிடுவித்து வரவேணுமென்று நாம் அடிக்கடி செய்து வருகிற ஸமுத்போதனம் நிஷ்ப்பலமாகிறதே யென்கிற நிர்வேதத்தை நாம் வெளியிடாமலிருக்க முடியுமா? இவர்களுடைய ஆர்ஜவம் இவ்வொரு விஷயத்திலாவது வெளிவருமா? 'இவன் சொல்லி நாம் திருத்திக் கொள்வதா?' என்கிற ஆக்ரஹமே கொண்டு இனி இவர்கள் இதிலும் வாதாடப் போகிறார்கள்; மடத்துப் பதிப்பிலும் (இதி கடதே) என்கிற பாடமே தைவாதீனமாய் ஏறியிருப்பதால் அப்பாடத்தைப் பழிக்கத் துணியார்கள். (இஹ கடதே) என்கிற பாடமும் நன்று தானென்று வாதிக்க எழுவர்கள். எல்லாக் கூத்தையும் உலகம் பார்க்கவே போகிறது. 'இஹ கடதே' என்கிற பாடம் ஒரு படியாலும் பொருந்தாது. கீழே * நிர்வாஹஸ் தூபசாராத் க்வசித் * என்று தனி வாக்யமாக முடிந்திட்டது. அதன்மேல் (இதி) என்றது ஆகவே என்றபடி. இதுதான் இங்கு அவசியமிருக்கவேண்டிய பதம். இஹ என்றால் அசடுதட்டியே தீரும். வியாக்கியானங்களும் இங்குக் கை விளக்கேற்றிக் காட்டுகின்றன. இப்படியாக, சிறியனவும் பெரியனவுமாக ஸ்ரீ தேசிகஸூக்தி மருமங்கள் பலவற்றை நம்மிடமறிய நிற்கின்ற இவர்கள் மீண்டு மீண்டும் நம்மோடு எதிரம்பு கோக்க வருவதும் க்ஷாமண பத்ரிகை யெழுதிக்கொண்டு ஓய்வதுமாக இவையும் ப்ரவாஹதோ நித்யமாம்படி பகவத் ஸங்கல்பம் காண நின்றோம். இந்தப் பாடஸ்காலித்ய விஷயம் ஒரு சிறு அக்ஷரத்தைப் பற்றியதே யானாலும் இதன் அருமையை யுணர்ந்த R. V. K. ஸ்வாமி மஹாநிதி பெற்றதாகவே நினைத்து மகிழ்ந்தார்."

ஆக இவ்வளவும் அண்ணங்கராசாரியருடைய வியாஸம். இதற்கு மேல் திருச்சி கோபாலாசார்ஸ்வாமி "இதை அச்சுப் பிழையென்று விட்டுவிடவும்" என்று லகுவாக எழுதி முடித்துக்கொண்டார். ஆனாலும் எல்லாப் பண்டிதர்களும் இப்படி ப்ராமாணிக பத்ததியை அவலம்பிக்க முடியாதன்றோ. இதைப்பற்றி அஹோபில மடத்துப் பத்ரிகையில் [ஆசார்ய ஜயந்திமலரில்] நாரணமங்கலம் சிரோமணி யென்பாரொருவர் பெயரையிட்டு "இஹ பாடம் இதி பாடம் இரண்டுமுண்டு. அவரவர்களுக்கு எதில் ருசியோ அதை பரிக்ரஹித்துக் கொள்ளலாம்." என்று வெளியிடப்பட்டது. அதன்மேல் அண்ணங்கராசார்யர் எழுதியுள்ள விஷயங்கள் மிகவும் அற்புதமானவை; அவற்றையும் இங்கு அப்படியே உதாஹரிக்கிறேன்:— இவ்விஷயத்தில் எழுதவேண்டியவர் ஸ்ரீமத் ஏ. வி. கோபாலாசார்யஸ்வாமியே தவிர வ்ருதாஶ்ரமப்படும் சில வ்யக்தி

களுக்கு இங்கு என்ன ப்ரவேசம்? தேசிக திவ்யஸூக்திகளை இவர்கள் பாம்பராயாவன்றிக்கே இடையிலே இழுத்துப்போட்டுக் கொண்டு கற்கத் தொடங்கினபடியாலே தப்புப் பாடங்களே இவர்களுக்கு மலிந்திருக்கின்றன. இம்மலரிலிருந்தும் இவர்கள் கொண்ட சில தப்புப்பாடங்களை யெடுத்துக் காட்டி உலகுக்கு மஹோபகாரம் செய்கிறோம். மதுராந்தகம் ஈச்சம்பாடி வீராசாரியார் ஸ்வாமியால் "ஸ்ரீதேசிகனும் வேதாந்தாசார்யகமும்" என்கிற வியாஸத்தில் "வீண் பெரிய விரிதிரைநீர் வையத்துள்ளே வேதாந்தவாரிய னென்று இயம்ப நின்றோம்" என்று தேசிகப்பிரபந்தப்பாட்டு காட்டப்பட்டிருக்கிறது. (வீண்பெரிய) என்றால் என்ன பொருள் என்று ஆராயமாட்டிற்றிலர். மூலம் சந்தை சொன்னதும் திருவை சொன்னதும் சொல்லி வைத்ததுமெல்லாம் தப்புப்பாடமேயாயிற்று. (வேண்பெரிய) என்பதே உள்ளபாடம். 'பெரிதும் வேண்டப்படுகிற' என்று பொருள். வீண் பெரிய முயற்சிகள் ஏதுக்கிவர்க்கு? ப்ரஸங்காத் இவருடைய வியாஸத்தில் மற்றொன்றும் தெரிவிப்போம். பாடங்களை தவறாக உதாஹரிப்பதைத் தமக்கு நிலமல்லாத க்ரந்தங்களிலும் வைத்துக்கொண்டாரிவர். 'பாஷ்யகாரர் இதுகொண்டு' இத்யாதியான ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியை உதாஹரித்து அதற்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியான பங்க்தியாக எடுத்துக் காட்டுகிறார்—'ஸ்ரீபாஷ்யகாரர் இப் ப்ரபந்தத்தின் ஸூக்திகளைக் கொண்டு ஸூத்ரவாக்ய ஸந்திக்தார்த்தங்களை ஐககண்ட்யம் பண்ணியருளுவர் என்பதாக மாமுனிகள் விவரணமுள்ளது" என்று. இப்படிப்பட்ட அஸம்பத்தமான பங்க்தி விசதவாக்சிகாமணிகளின் திருவாக்கில் ஒருபோதும் வாராது. ஸந்திக்தார்த்தங்களை ஐககண்ட்யம் பண்ணுவதாக எழுதுகிறமுறை பண்டித கோஷ்டிகளில் நடையாடுமதன்று. ஸந்திக்தார்த்தங்களை நிர்ணயிப்பதென்றும், அர்த்தவிரோதம் தோன்றுமிடங்களில் ஐககண்ட்யம் பண்ணுவதென்றும் விவேகிகள் வ்யவஹரிப்பர்கள். 'ஸந்திக்தங்களான அர்த்தங்களையெல்லாம் நிர்ணயித்து' என்று தெள்ளிதாகவுள்ள மணவாளமாமுனிகளின் பங்க்தியைத் தம்முடைய மதிக்கேற்பத் தவறாக உதாஹரித்துக் காட்டுகிறார்போ. இது நிற்க. ப. ரெ. திருமலை ஐயங்கார் என்கிற மற்றொரு தமிழ்ப்பண்டிதர் "தமிழ்க்கடவுள்" என்றொரு வியாஸமெழுதி அதிலும் தேசிகப்

ப்ரபந்தப்பாசுரமொன்றை யெடுத்தாளுகிறார் * அந்தமில்சீரயிந்தை நகரமர்ந்தநாதனித்யாதி. இதில் * பந்துகழலம்மானையூசலேசல் * என்றதற்குப்பின் 'பாவு நவமணிமாலை' என்று அந்தபாம்பரைப் பாடத்தையே இவருமாதரிக்கிறார். குருமுகமாகக் கேளாமல் ஏடுபார்த்துக் கற்பதனாலான அனர்த்தமிது. ஓலைச்சுவடிகளில் (ா) (ர) இவ்விரண்டுக்கும் வாசி தெரியாமே எழுதப்படுவது வழக்கம். 'உனதடியே சரணமே' என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தை (உனதடியே சாணமே) என்று தோழுந்தாரில் சிலர் ஸேவிக்கக் கேட்டதுண்டு. இத்தகைய விபர்யயங்கள் பல்லாயிரம். ப்ரக்ருதத்தில், * பந்துகழலம்மானையூசலேசற்பாவும் நவமணிமாலையிவையும் சொன்னேன் * என்றுதான் ஸ்வாமி ஸாதித்தது. (பாவும்) என்றது பந்து முதலிய ஒவ்வொன்றிலுமந்வயிப்பது; பந்துப்பாவும் கழற்பாவும் அம்மானைப்பாவும் ஊசற்பாவும் ஏசற்பாவும் நவமணிமாலையும் சொன்னேன் என்பது பொருள். அந்த பிரபந்தங்கள் லுப்தமாய்விட்டாலும் அவற்றின்பெயர் பந்து கழல் அம்மானை......என்றல்லவே. பந்துப்பா, கழற்பா......என்றன்றோ. அதைத்தான் ஸ்வாமி அருளிச்செய்திருப்பது. இயல் ஸேவிக்கும்போது 'பந்துகழலம்மானை யூசலேசற்பாவும்' என்றே நிறுத்தி ஸேவிக்கவேண்டும். இத்தகைய பாடவுண்மைகள் நம்மிடமிருந்து வெளிவரவேண்டுமென்பதற்காகவே எம்பெருமான் இவர்களையிட்டுத் தப்புப்பாடங்களை ப்ரசுரிக்கச் செய்கிறானென்பது தத்துவம். இவர்களுடைய தப்புப்பாடங்களை யெடுத்துக்காட்டித் திருத்துவார் இவர்களது கோஷ்டியில் ஒருவருளரோ? எடுத்துக் காட்டினாலும் அவிவேகயையினால் ஆக்ஷேபிப்பதற்கும், 'அப்படியுமிருக்கலா மிப்படியுமிருக்கலாம்' என்பதற்கும் பலருளர்."— என்பது அண்ணங்கராசார்யருடைய லேகனம்.

இந்த ப்ரகரணத்தில் ப்ராஸங்கிகமாக மற்றொரு விஷயமும் தெரிவிக்க வேண்டியதாகிறது. மதுராந்தகத்திலுள்ள அஹோபிலமடத்து ஸம்ஸ்க்ருத காலேஜில் வில்லிவலம் நாராயணாசார்ய ரென்று ஒரு வித்வானுளர். அவர் வேதாந்த வாவதூகரென்று விருது வஹிக்கிறார். அவரும் ந்ருஸிம்ஹப்ரியாவின் ஆசார்ய ஜயந்திமலரில் **பாத்ரபதம்** என்றொரு வியாஸமெழுதியிருந்தார். அதை விமர்சித்து நம் அண்ணங்கராசாரியர் எழுதி

யுள்ள வொரு வியாஸமும் பண்டித கோஷ்டியில் பராமர்சிக்கத் தக்கதென்று இங்கே எடுத்துக் காட்டுகிறேன்;—

[ப்ர-அ-வியாஸம்.]

“வேதாந்தவாதுூலகர் பாத்ரபதம் என்றெழுதிய வியாஸம் உண்மையில் ப்ராமாணிகமானது. ஸ்ரீராமாயண வ்யாக்யாதாவான கோவிந்தராஜரை உள்ளபடி ஆச்சரியமாகப் புகழ்கிருர். சிறிதும் அதிசயோக்தியின்றிக்கே யதார்த்தமாகக் கொண்டாடுகின்ருர். “இன்னபடிப்பட்டதென்று வரையிட்டுச் சொல்லமுடியாத பஹுமுகமான ஜ்ஞானஸம்பத்துடையவர் கோவிந்தராஜர். இவர் செய்த ராமாயண வியாக்கியானம் ரஸிகர்களின் பஹுமானத்தைப் பெற்று இதர வியாக்கியானங்களை வெகுதூரத்தில் விலக்கி வெற்றி கொண்டுள்ளது.” என்று புகழ்ந்திருக்கிருர். தேசிக திவ்யஸூக்திகளைத்தழுவியே இக்கோவிந்தராஜர் வியாக்கியானம் செய்தவர் என்று அழகாக நிருபிக்கிருர். அதுவும் அத்புதமான நிருபணமே. மதுராந்தகத்தில் ஒரு ஸாத்விகர் இந்த வாவதூகரிடம் வந்து ஸ்ரீராமாயணம் அயோத்யாகாண்டம் 113 ஆம் ஸர்க்கம் 18, 19 சுலோகங்களின் கோவிந்த ராஜீயத்தைக் கையில் கொடுத்து வாசிக்கச் சொல்ல ஆனந்தமாக வாசித்தாராம்; வாசித்த பங்க்திகளாவன —अत्र पुनःपुनरित्यनेन एकं प्रदक्षिणं न कार्यमित्युक्तम्। प्रदक्षिणविशेषणेन प्रणामस्तु सकृदेवेत्युक्तं भवतीत्याचार्याः॥ என்பன. உடனே केचित्तु—इत्याहुः என்பதையும் வாசித்தாராம். வாசித்துவிட்டு மருளமருள விழிப்பதும் கறுக்கச் சிவக்கப் பார்ப்பதுமாகி, உம்! ஊம்!! உம்! என்று பெருமூச்செறிந்து ஸரிதான், இதுவும் தேசிக திவ்யஸூக்தியைத் தழுவியே தான் ஸாதித்திருப்பது; * நமோ நமோ வாங்மநஸாதிபூமயே * என்றவிடத்து ஸ்தோத்ரபாஷ்யத்திலுள்ள நிஷ்கர்ஷத்தைத் தழுவியே இது ஸாதித்திருப்பதால் ஒரு குறையுமில்லை என்ருராம்.” (ஆக இவ்வளவும் அண்ணங்கராசார்யருடைய பங்க்திகள்.)

11. இடையில் வாசகர்களுக்கு ஒரு விண்ணப்பம் செய்யவேண்டியதாகிறது. ‘வேதாந்தவாரியரும் அண்ணங்கராரியரும்’ என்கிற இந்தச் சிறு நூலை யெழுதப்புகுந்த அடியேனுடைய அபிஸந்தியை முகப்பிலேயே தெரிவித்துக்கொண்டிருக்கிறேன். வேதாந்தவாரியருடைய க்ரந்தங்களில் அண்ணங்கராசார்யருக்கு

உள்ள அவகாஹநாதிசயங்களை அடியேன் அநுபவித்தவரையில் எடுத்துரைத்து மற்றுமுள்ள விவேகிகளையும் அனுபவிக்கச் செய்வதுதான் முக்கியமான உத்தேச்யம். இதற்கு ஸாக்ஷாத்தாக ஸம்பந்தப்படாத சில சில விஷயங்களும் இடையில் புகுமாகில் அவையும் ஒரு ரஸாநுபவத்திற்கு உடலாகியே இருமென்று கொள்ள வேணும். மேலே யெடுத்துக் காட்டிய வேதாந்தவாவதூகருடைய விஷயம் ஸ்ரீராமாயண வ்யாக்க்யான ஸம்பந்தியேயானாலும் அவர் ஸ்தோத்ரபாஷ்யத்திலுள்ள ஒரு நிஷ்கர்ஷத்தை ஸ்ரீராமாயண வியாக்க்யாந ஸம்வாதியாய்க் காட்டினதாக முடிந்திருக்கிறது. ஸ்தோத்ரபாஷ்யத்தில் * நமோ நமோ வாங்மநஸாதிபூமயே * என்ற ச்லோகத்தின் விவரணத்தில் *प्रशंसायां प्रतिज्ञायां प्लापे तर्जनेऽपि च। भये च विजये चैव पौनःपुन्यमलंकृतिः॥ * என்ற காரிகையின் உட்கருத்தை வேதாந்தவாவதூகர் அவகாஹித்துக்கொண்டது அறிவிக்கவேண்டிய ஆவச்யக விஷயமுமாகும். ஆக, இத்தகைய சில விஷயங்களும் இதில் கலப்பதில் ரஸபுஷ்டியே யொழிய ரஸபங்கமில்லை யென்று தெரிவித்தபடி.

12. ஸச்சரித்ர ரக்ஷையில் ஊர்த்வபுண்ட்ர விசாரபரமான இரண்டாமதிகாரத்தில்:—“ननु समस्तभागवतसार्थसंगृहीतवकुलधरमहर्षिद्दष्टे द्रमिडनिगमे कथम्........” என்று தொடங்கி, * கரியமேனி மிசைவெளிய நீறு சிறிதேயிடும். பெரிய கோலத் தடங்கண்ணன் * (4-5-6) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தைப்பற்றி அர்த்த விசாரம் செய்யப்புகுந்து “चक्षुषि च तद्धारणं तत्र विहितमिति अञ्जनपरत्वमाहुराचार्याः” என்று எழுதியுள்ளார்தேசிகன். இங்கு **ஆசார்யா:** என்கிற சொல்லால் எந்த ஆசார்யரைக் குறிப்பிடுகிறார் என்பதை விமர்சித்து நிர்த்தாரணம் செய்யப்புகுந்த அண்ணங்கராசார்யர் உள்ளபடி கண்டு எழுதியிருக்கும் விஷயம் அசைக்க முடியாதது. அவருடைய உபபாதனங்களை இங்கு விவரிக்கிறேன்; மேலே குறித்த பாசுரத்திற்குப் பிள்ளானுடைய ஆறுயிரப்படி வியாக்கியானம்:—“நீலமேக நிப திவ்ய ரூபோசித திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனாய், அதி விசாலமாய திரமணீயமாயிருப்பதொரு தாமரைத் தடாகம்போலே யிருந்த திருக்கண்களையுடையனாய்” என்பது. இதனால், வெளிய நீறு என்பதற்கு திவ்யாங்க ராகமென்னும் பொருள் கொள்ளப்

பட்டதென்பதும், 'கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும்' என்கிற முதலடியானது எம்பெருமானுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டதென்பதும் நன்கு விளங்கிற்று. நம்பிள்ளையினுடைய ஆசார்யரும் அந்தேவாஸிகளும் தங்கள் வியாக்கியானங்களில் அருளிச்செய்திருக்கும் விதமானது பிள்ளானருளிச் செய்தவிதத்திற் காட்டில் மிக வேறுபட்டது. 'வெளிய நீறு' என்பதற்கு அஞ்ஜநசூர்ணமென்று பொருள்கொள்ளப்பட்டது. "கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும்' என்கிற முதலடி எம்பெருமானுக்கு விசேஷணமாகக் கொள்ளப்படாமல் 'பெரியகோலத் தடங்கண்ணன்' என்றதன் ஏகதேசமான திருக்கண்களுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டது. 'திருக்கண்களின் கரிய விழியினுடைய கறுத்த நிறத்தின்மேலே அஞ்ஜநசூர்ணத்தை யிடப்பெற்ற திருக்கண்களையுடையவன்' என்னும் தாத்பரியம் பெரியவாச்சான்பிள்ளை முதலானோருடைய வியாக்கியானங்களில் மாத்திரம் காண்கிறது. பிள்ளானுடைய வியாக்கியானம் இதனில் மிக வேறுபட்டதென்பது புநருக்தம். " चक्षुषि च तद्धारणं तत्र विहितमिति अञ्जनपरत्वमाहुराचार्याः " என்றெழுதிய தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை முதலானோரையே ஆசார்யராகச் சுட்டினாரென்பது நிஸ்ஸந்தேஹவிபர்யயம். பிள்ளானுடைய வியாக்கியானத்தில் **நீறு** என்பதற்கு அஞ்ஜநபரத்வமும் கூறப்படவில்லை; சக்ஷுஷி தாரணமும் காட்டப்படவில்லையன்றோ. ஆறாயிரப்படியில் "திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனாய்" என்கிற பங்க்தி ஸுஸ்பஷ்டமாயிருக்கையாலே **நீறு** என்பதற்கு அங்கராகப் பொருளும் அந்த அங்கராகத்தினால் திருமேனி அநுலிப்தமாயிருக்கிறதென்பதுமே பிள்ளானுடைய திருவுள்ளமாகத்தேறுகிறது. ஆக, ஸச்சரித்ரரக்ஷையில் **ஆசார்யா ஆஹு:** என்று எடுத்துக் காட்டியிருக்கும்விஷயம் பிள்ளானுடைய படியில் கிடையாதென்றும் நம்பிள்ளை பரம்பரையினருடைய வியாக்கியானங்களிலேயே உள்ளதென்றும் நிஸ்ஸந்தேஹமாகத் தேறுகின்றது. (கேசித் ஆஹு:) என்னாமல் **ஆசார்யா ஆஹு:** என்றெழுதியிருக்கையாலே நம்பிள்ளை பரம்பரையில் வந்த மஹான்களைத் தமக்கு ஆசார்யராகக்கொண்டு உஜ்ஜீவித்தவர் வேதாந்தவாரியர் என்கிற பரமார்த்தம் நிஷ்கல்மஷமாகத் தேறுகின்றதென்று அண்ணங்கராசார்யர் நிரூபிக்கிறவிது அப்ரகம்ப்யமாக நின்றிருக்கிறது. இதைப் பரச்சதங்களான தேசிகவசனங்களைக்கொண்டு திடப்படுத்தியிருக்கிறார். அவற்றையும் சிறிது காட்டுகிறோம்.

13. வேதாந்தாசிரியர் உபய வேதாந்தத்தையும் குருமுகமாக அதிகரித்தவர் என்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானமும் அவதரியாதிருந்தகாலத்தில் பூர்வாசார்யர்கள் மூலத்தைக் கைக்கொண்டே ஸ்வஸ்வாசார்யர்களிடத்தில் அர்த்தச்ரவணம் பண்ணிவந்தார்கள். பிள்ளானுடைய ஆறாயிரப்படி அவதரித்தபின்பு அக்காலத்திலுள்ளவர்கள் அதைக்கொண்டே காலக்ஷேபம் செய்துவந்தார்கள். நஞ்சீயருடைய ஒன்பதினாயிரப்படிக்குப் பிறகு பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்தினாலாயிரப்படி மிகவும் விரிவாகவும் ஸம்பூர்ணமாகவும் அவதரித்தபடியினாலே அக்காலத்திலிருந்தவர்கள் யாவரும் அந்த இருபத்தினாலாயிரப்படிகொண்டே காலக்ஷேபம் செய்துவந்தார்கள். அக்காலத்தில் ஈடுமுப்பத்தாறாயிரப்படி அவதரித்திருந்தும் அது அக்காலத்தில் பிரசாரமடையாமல் ஒரு நூற்றாண்டு கழிந்தபின்பே பிரசாரமடைந்தபடியினால் அந்த மத்யகாலத்தில் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானமே வேதாந்தவாசிரியர் முதலானோர்க்குக் காலக்ஷேப க்ரந்தமாக விளங்கிற்று என்னுமிவ்விஷயத்தை அண்ணங்கராசிரியர் அளவுகடந்த ஸாக்ஷியங்களை அவிசால்யமாகக் காட்டி நிரூபிக்கிறார். அந்த நிரூபணங்கள் மிகவும் ஆச்சரியமானவை. ஸாமாந்யப்ராஜ்ஞர்களின் புத்திக்கு அவை அடியோடு எட்டமாட்டாதவை. அவை அண்ணங்கராசாரியருடைய பல க்ரந்தங்களினால் ஜகத்ப்ரஸித்தங்களாதலால் இங்கு அதைப்பற்றி அதிகமாக விவரிக்காமல் சுருங்கச் சொல்லுகிறேன். திருவாய்மொழியில் (1-8.) ஓடும் புள்ளேறி. (1-10) பொருமா நீள்படை. (2-8) அணைவதரவணைமேல்...இவை முதலான தசகங்களுக்கு ஆறாயிரப்படியிலுள்ள அவதாரிகைகள் வேறுவிதம்; பெரியவாச்சான் பிள்ளையிருபத்தினாலாயிரப்படியிலுள்ள அவதாரிகைகள் வேறுவிதம். இதை ஒவ்வொருவரும் அநாயாஸமாக அறியலாம். வேதாந்தவாரியரோவென்னில், இருபத்தினாலாயிரப்படியையே அடியொற்றி த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவலியையும் த்ரமிடோபநிஷத் ஸாரத்தையும் ஸாதித்திருக்கிறார். இது அபலபிக்க முடியாமலிருக்கின்றது. தாத்பர்யரத்நாவலியில் திருவாய்மொழியின் ஒவ்வொரு பாசுரத்தை நோக்கி ஒவ்வொரு பதமன்றே அருளிச்செய்யப்படுகிறது. அப்படிப்பட்ட பதமும் பெரும்பாலும் இருபத்தினாலாயிரப்படியிலுள்ள பதமாகவுள்ளதென்று இதையும் நுட்பமாகக்

கண்டு எடுத்துக் காட்டியிருக்கிறுர் அண்ணங்கராரியர். இவற்ருல், வேதாந்தவாரியர் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தைக் காலக்ஷேப க்ரந்தமாகக் கொண்டது மாத்திரமன்றிக்கே ஓரக்ஷரம் விடாமல் கண்ட பாடமும் செய்திருந்தாராகத் தெரிகின்றதாகவும் உபபாதனம் செய்திருக்கிறுர். தாத்பர்ய ரத்நாவலியிலோ ஸாரத்திலோ ஆருயிரப்படியை மாத்திரம் தழுவியருளிச் செய்த விஷயம் ஒன்றுகூட இல்லையென்றும், பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தைத் தழுவியருளிச்செய்த விஷயங்களே மலிந்திருக்கின்றனவென்றும் அண்ணங்கராசாரியர் அதிவிபுலமாக நிரூபித்த விஷயங்களை அஸஹிஷ்ணுதையாலே மறுக்கப்புகுந்த சில பண்டிதர்களின் ப்ரயத்னம் சிறிதும் ஸபலமாகவில்லை. அன்னவர்களின் முயற்சிகள் அண்ணங்கராசாரியருடைய நிரூபணங்கள் ஊர்ஜிதமாவதற்கே ஹேதுவாயின. கடைசியாக மிக முக்கியமான விஷயமொன்று அண்ணுஸ்வாமியின் அம்ருதலஹரியின் மூலமாக உலகம்போற்ற வெளிவந்தது, அதையும் சிறிது விவரிக்கிறேன்.

14. "திருவாய்மொழியில் (7-5-1.) * கற்பாரிராமபிரானையல்லா லென்னும் பாசுரத்தில் * நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நற்பாலுக்குய்த்தனன் நான்முகனுர் பெற்ற நாட்டுளே * என்பதற்கு ஆருயிரப்படி முதலிய நான்கு மஹாசார்ய வ்யாக்கியானங்களில் ஏகரீதியாக அர்த்தம் அருளிச் செய்யப்பட்டிருக்கின்றது.

(ஆருயிரப்படி)— "ப்ராக்ருத வஸ்துக்களே தாரக போஷக போக்யமாயிருக்கக் கடவ இப் ப்ரக்ருதி மண்டலத்திலே வைத்துக் கொண்டு திருவயோத்யா நகரியிலே வர்த்திக்கிற தூர்வாதி நிகில ஜந்துக்களையும் கர்மயோகாத்யுபாயம் பண்ணுதிருக்கச்செய்தேயும் இருநாட்டிலுள்ளாரைப்போலே தன் திருவடிகளே தாரக போஷக போக்யமாக்கியருளின இம் மஹா குணத்தை யுடையனுயிருந்த இராமபிரானையல்லாமல் மற்றும் கற்பரோ?"

(ஒன்பதிஞயிரப்படி)— "திருவயோத்யையிலுண்டான ஸகல பதார்த்தங்களையும் நிர்ஹேதுகமாக ஸ்வஸம்ச்லேஷ விச்லேஷைகஸுக துஃக்கராம்படி பண்ணியருளின உபகாரசீலனுன ராமனை—"

(இருபத்திநாலாயிரப்படி)— "ஸ்தாவர ஜங்கமாத்மகமான ஸகல பதார்த்தங்களையும் தன் ஸம்ச்லேஷ விச்லேஷமே ஸுகதுஃக்கமாம்படி பண்ணினுன்,"

(௫௫)— "திருவயோத்யையிலுண்டான ஸகல பதார்த்தங்களையும் நிர்ஹேதுகமாக ஸ்வஸம்ச்லேஷ விச்லேஷ ஸுக துக்கராம்படி பண்ணியருளின உபகாரசீலனான......"

ஆக ஸகல வ்யாக்கியாதாக்களும் ஒருமிடருகத் திருவுள்ளம் பற்றின அர்த்தம் இன்னதென்று ஸ்பஷ்டமாயிற்று. * நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நற்பாலுக்கு உய்த்ததாவது— *விஷயே தே மஹாராஜ! ராமவ்யஸநகர்சிதா:, அபிவ்ருக்ஷா: பரிம்லாநாஸ் ஸபுஷ்பாங்குரகோரகா: * இத்யாதிகளாலே ப்ரதிபாதிதமான ஸ்வபாவ விசேஷத்தை விளக்கையே யொழிய மோக்ஷப்ரதானமன்று. மோக்ஷப்ரதானமென்கிற பொருளைப் பிள்ளான் முதலான ஆசார்யர்கள் திருவுள்ளம் பற்றவில்லையென்பது ஸ்பஷ்டம். இப்படியிருக்க, வேதாந்தவாரியர் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியில் இப்பாசுரத்திற்காக இட்ட ஸம்ஸ்க்ருதம் "साकेते मुक्तिदानात्— ஸாகேதே முக்திதாநாத்" என்றுள்ளது. * அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றி * என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரத்தின் பொருளையும் இப்பாசுரத்தின் பொருளையும் ஒன்ருகக் கருதி 'ஸாகேதே முக்திதாநாத்' என்று [* நற்பாலுக்குய்த்தனனென்றது மோக்ஷப்ரதானம் பண்ணினபடியைச் சொல்லுகிறதாக வைத்து] ச்லோகமியற்றியுள்ளார். நஞ்சீயர் முதலானுர் அருளிச்செய்தது இருக்கட்டும். ஆருயிரப்படியில் பிள்ளான் அருளிச்செய்ததை மாத்திரம் நெஞ்சில் கொண்மின். எதிராசர் பேரருளால் பிள்ளானருளிச்செய்த பொருளுக்கு முரணுக (ஸாகேதே முக்திதாநாத்) என்று மோக்ஷப்ரதானத்தை இப்பாட்டின் ப்ரமேயமாக அருளிச் செய்யக் காரணம் யாதென்று விமர்சிக்கவேணும். விமர்சகுசலர்கள் இங்கே நிர்ணயித்திருப்பதாவது, திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படியுரை யருளிச்செய்த வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் வேதாந்தவாரியருக்கு ஸமகாலஸ்தர். ஜீயர் பதினேழுவயது முற்பட்டவர் என்றும் ஆப்தர்கள் நிரூபித்திருக்கிருர்கள். வேதாந்தவாரியர் பரமபதித்தது ஸௌம்ய வருஷத்தில். அதற்கடுத்த ஸாதாரண வருஷத்தில் மணவாள மாமுனிகளின் திருவவதாரம். மாமுனிகள் உபதேசரத்தினமாலையிலும் மற்றும் ரஹஸ்ய வியாக்கியானங்களிலும் வாதிகேஸரி ஜீயருடைய க்ரந்தங்களைப் பற்றிப் பலகால் ப்ரஸ்தாவித்திருக்கையாலே இது கொண்டு அந்த ஜீயர் வேதாந்தவாரியருடைய ஸமகாலத்தவர் என்பது அறுதியிடப்

பெறும். அப்போது அந்த ஜீயருடைய க்ரந்தங்கள் இவருக்கும் இவருடைய க்ரந்தங்கள் அந்த ஜீயருக்கும் எட்டியிருந்தன வென்பதும் ஆராய்ச்சியினுல் நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. அந்த ஜீயர் உபயபாஷைகளிலும் க்ரந்தங்கள் இயற்றியவர். அவரிடத்திலும் வேதாந்தவாரியர் மிகுந்த கௌரவப்ரதிபத்தி வஹித்திருந்தவர். அந்த ஜீயருடைய பன்னீராயிரப்படியையும் இவர் உபஜீவித்திருக்கிருரென்பது தெரியிருக்கிறது. அவர் * கற்பாரிராமபிரான் பாசுரவுரையில், பிள்ளான் முதலானுர் செய்தருளிய வியாக்கியானத்திற்கு முரணுக மோக்ஷப்ரதானப் பொருளைப் பணித்துள்ளார். அதைப் பார்த்து அப்படியே இவர் * ஸாகேதே முக்திதா நாத் * என்று ச்லோக மியற்றினுர் என்பதே தத்துவம். ஆனுல் இதை நவீனர்கள் எளிதாக இசைய மாட்டார்கள். எதிலும் விபரீதவழியைப் பற்றிக்கொண்டே போராடுவது நவீனர்கள் செயலாதலால் இவ் விஷயத்திலும் விபரீதங்கள் பேசிக் கனமாகப் போராடுவர்கள். அதற்கு நாம் இடம் கொடுக்கில்லோம். வாதிகேஸரி ஜீயரைப் பற்றி இங்குச்செய்த ப்ரஸங்கத்தை அறவே விட்டிடுவோம். அவருடையவுரையைப்பாராமல் ஸ்வதந்திரமாகவே * ஸாகேதே முக்திதாநாத் * என்று ச்லோகமிட்டாரென்றே ஒப்புக்கொள்வோம். ஸத்ஸம்ப்ரதாய ப்ராப்தமான அர்த்தத்தைப் பிள்ளானருளிச் செய்திருக்கிருரென்பது நிர்விவாதமான விஷயம். அந்த பிள்ளானுரையை அப்புள்ளார் திருவடிகளில் இவர் காலக்ஷேபம் கேட்டிருக்கிருரென்பதும் உள்ளது. அதிலுள்ள அர்த்தங்களெல்லாம் இவர் திருவுள்ளத்தில் அப்படியே தேங்கியிருக்குமே. * **புநருச் சாரணுகாங்க்ஷீ பதாநாம் வேஷ்டநே பரம்** * என்று ஆசார்ய சம்புவில் கூறியபடி வேதங்களை யெல்லாம் ஏகஸந்தையில் கண்டஸ்தமாக்கிக் கொண்டிருந்தவர் ஆருயிரப்படியையும் அப்படியே நித்யாநுஸந்தானத்தில் கொண்டிருந்தாரென்பதில் ஸந்தேஹமுண்டோ? அப்படி கண்டஸ்தமாக்கிக் கொண்டும் சிரஸா வஹித்துக் கொண்டுமிருக்கிற திருவாருயிரப் படியிலுள்ள பொருளைத் தள்ளி வேறொரு பொருளை இவர் கொண்டது ஏன்? இது ஸம்ப்ரதாயாகதமான பொருளன்றே, புதிதாகத் தோன்றிய பொருள்தானே, ஸதாசார்ய பரம்பராகத ஸத்ஸம்ப்ரதாயார்த்த நிஷ்டர்களான பெரியார்க்கு இது வர்ஜநீயந்தானே—என்று சிலர் சொல்லப் புறப்பட்டால் அப்போது நவீனர்கள் என்ன ஸமாதானம் சொல்லுவர்களென்பது க்ரமேண தெரியவேணும்.”

15. ஆக இப்படி பிள்ளானுடைய வியாக்கியானத்தில் இல்லாததும் பெரியவாச்சான்பிள்ளை முதலானோருடைய வியாக்கியானங்களிலேயே உள்ளதுமான அர்த்தங்கள் தாத்பர்யாத்நாவளியில் இடம் பெற்றிருப்பதாக அண்ணங்காராரியர் விபுலமாக எடுத்துக் காட்டுகிறார். இந்த ஸந்தர்ப்பத்தில் பிறர் செய்யவேண்டியதொன்றுண்டு; இதாவியாக்கியானங்களில் இல்லாததும் ஆறுயிரப்படியிலேயே உள்ளதுமான அர்த்தங்களும் தாத்பர்யரத்நாவளியில் இடம்பெற்றிருப்பதுண்டு என்று ப்ரதிஜ்ஞை செய்து ஓரிடமாவது எடுத்துக்காட்ட முயலவேண்டும். வஸ்துத: அப்படியெடுத்துக்காட்டி விடுவதனால் அவர்களுக்கு யாதொரு லாபமுமில்லை. ஆனாலும் ஒருவாறு ஆத்மதிருப்திக்கு அது செய்யலாம். அப்படி யெடுத்துக் காட்டுவதற்கு ஓரிடங்கூட இல்லையே யென்று அண்ணங்கராரியர் துணிந்து எழுதுகிறார். அதனால் அவருடைய விமர்ச கௌசலம் மிகவும் வெற்றி பெற்றதாகிப் போற்றப்படுகின்றது. வேதாந்தவாரியர் பெரியவாச்சான்பிள்ளையின் திவ்யஸூக்திகளையே தஞ்சமாகக் கொண்டிருந்தாரென்கிற தத்துவம் கல்வெட்டாகக் காட்டப்படுகிறது. இவ்விஷயத்தை திருச்சி ஏ. வி. கோபாலாசாரியர்ஸ்வாமி போல்வாரான சில ப்ராமாணிகர்களே மனமுகந்து ஏற்றுக்கொள்ளுகிறார்கள். உண்மையில் அதற்கு என்ன காரணமென்றால், வேதாந்தவாரியர் தம்முடைய ரஹஸ்யத்ரயஸாரக்ரந்தத்திலு முட்பட பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை மேற்கோளாக வெடுத்துக்காட்டி [அதாவது, *குலந்தரும் செல்வம் தந்திடுமென்கிற பெரியதிருமொழிப் பாசுரத்தின் வியாக்கியான பங்க்திகளை அப்படியே உதாஹரித்து] அவற்றில் ஆதராதிசயம் காட்டியிருப்பதை ப்ராமாணிகர்கள் உள்ளபடியறிந்தவர்களாதலால் ஆர்ஜவத்தைக் கைவிடமாட்டாமையே காரணம்.

வேதாந்தவாரியர் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளைப் பின்பற்றியேபலவும் அருளிச் செய்திருக்கிறாரென்பதை அண்ணங்கராரியர் மஹாபாரத மென்னலாம்படி உபபாதித்திருக்கிறார். ரஸிகமநோவிநோதார்த்தமாக இன்னமும் சில விஷயங்களை அவருடைய க்ரந்தங்களிலிருந்து எடுத்துக்காட்டி விவேகிகளை யுகப்பிக்கின்றேன்.

16. ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னத்தில் (45) "ஸமர்த்தம்" என்றுள்ளவிடத்தில் வேதாந்தவாரியர் தமது (ஸ்தோத்ர)

பாஷ்யத்தில் "आश्रितानां साम्यभोगप्रदाने समर्थम्" என்று அருளிச் செய்திருந்தார். **ஸாத்ம்ய** என்கிற சொல் ஸம்ஸ்க்ருதமன்றி த்ரோவிடியில் சிறிது அபூர்வமாகையாலே அதை உள்ளபடி அறியப் பெறாதவர்கள் '**ஸாம்யபோகப்ரதாநே**' என்றும் '**ஸ்வாத்ம** போகப்ரதாநே' என்றும் அர்ச்சிட்டுவிட்டார்கள். அதைப்பற்றின விமர்சம் ப்ராப்தமானபோது அண்ணங்கராரியர் அபிஜ்ஞர்கள் அகங்குழையக்கூடிய உபபத்திகளைக் காட்டி "**ஸாத்ம்ய**போகப்ர தாநே" என்கிற உண்மைப்பாடத்தை வெளியிட்டார். அதன் மேல் ஸ்ரீமத்பரமஹம்ஸ. கோழியாலம் ஸ்வாமிகள் **தத்வப்ர காச** மென்றொரு சிறுநூல் எழுதி **ஸாத்ம்ய** என்கிற பாடம் பொருத்தமன்று என்று வெளியிட்டார். அதன்மேல் அண்ணங்க ராரியர் **தத்வப்ரகாசபராமர்ச** மென்றொரு அத்புதமான நூலை இயற்றி வெளியிட்டு தம்முடைய அப்ரதிமமான ஆராய்ச்சி வல்லமையை நாற்றிசையுங் கொண்டாட நல்கியிருக்கிறார்; வேதாந்த வாரியருடைய ஸ்ரீஸூக்திமருமங்களை ஆழ்ந்து அறிவதில் அண்ணங்காரியருக்குள்ள அஸாதாரணமான ஸாமர்த்தியம் அதில் நன்கு விளங்குவதால் அதிலிருந்து சில பகுதிகளை இங்கே எடுத்துக் காட்டுகிறேன்:—

"ஸ்தோத்ர ரத்னத்தில் (45) * அசிந்த்ய திவ்யாத்புதநித்யாதி ச்லோகத்தில் "ச்ரிய: ச்ரியம் பக்தஜநைகஜீவிதம் ஸமர்த்தம்" என்றுள்ளவிடத்தில் எம்பெருமானுக்கு ஸமர்த்தம் என்றொரு விசேஷணமுள்ளது. க்ஷுத்ரர்களான நாமெல்லாருங்கூட ஸமர்த்தர்களென்று கொண்டாடப்படுகிறோம். எம்பெருமானை ஸமர்த்தனென்றால் அவனுடைய ஸாமர்த்தியம் ஸாமாந்யமாயிருக்கமுடியாதே; இங்கு எவ்விதமான விசேஷத்தைக் காட்டலாமென்று விமர்சித்த பெரியவாச்சான்பிள்ளை ஆளவந்தாருடைய திருவுள்ளத்தை உள்ளபடி யுணர்ந்து தமது வியாக்கியானத்தில்—"[ஸமர்த்தம்] அளவுடையரான நித்யஸூரிகள் அனுபவிக்கும் தன்னை நித்ய ஸம்ஸாரிகள் அநுபவிக்குமிடத்தில் * ஆற்றநல்லவகை காட்டுமம்மானை* என்கிறபடியே ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்கும் ஸாமர்த்யத்தையுடையவன்னை" என்றருளிச் செய்தார். உண்மையில் எம்பெருமானுக்கு இதுதான் அற்புதமான ஸாமர்த்தியம். இப்பங்க்திகளை ஸேவித்த தேசிகன் இவ்வர்த்தத்தை மிகவும் ரஸித்து இதை அப்படியே மொழிபெயர்த்தவர் போல" "आश्रितानां साम्यभोगप्रदाने" என்று அருளிச் செய்தார். (ஸாத்ம்ய) என்கிற ஸம்ஸ்க்ருதபதம் சிறிது அபூர்வமானது. சரகஸூச்ருதாதிகளிலே கையாண்டது. நம் ஆசார்யர்களின் திவ்யக்ரந்தங்களில்தான் இந்த பதம் விசேஷமாகக் காணப்படும். திருவாய்மொழியில் (1—9.) 'இவையுமவையுமுவையும்* என்கிற பதிகத்தில் எம்பெருமான் ஆழ்வார்க்கு ஸ்வாநுபவத்தை ஸாத்மிக்க ஸாத்மிக்கக் கொடுத்தருளினதாகப் பூருவாசாரியர்கள் வியாக்கியானம் செய்தருளினர். அதை யநுஸரித்து தேசிகன் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்னாவலியில் "विभुमनुबुभुजे साम्य-

भोगप्रदानात् " என்றருளிச் செய்தவர். அந்த ப்ரயோகத்தையே இங்குச் செய்தருளியிருக்கிறார். பல வருஷங்களுக்கு முன்பு திருவயிந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் ஸ்தோத்ரபாஷ்யத்தை மொழிபெயர்ப்புடன் தாம் அச்சிடுகையில் இங்கே ஸாந்ம்யபதஸ்வரூபத்தையும் இதன் பொருளழகையும் தெரிந்து கொள்ளகில்லாமல் " ஸாம்ய போகப்ரதாநே" என்ற பழைய பதிப்புகளில் கண்ட அசத்தியையே ஆதரித்து வெளியிட்டிருந்தார். அதைப்பற்றி அடியேன் விமர்சிக்க நேர்ந்ததனால் அடியேனுடைய மாதப்பத்திரிகையொன்றில் இவ்விஷயத்தை விரிவாக எழுதி * ஸாந்ம்ய போகப்ரதாநே * என்பது தான் தேசிகன் திருவாக்கில் அவதரித்த பாடம் என்று விளக்கியிருந்தேன். அதைக்கண்ட திருக்குடந்தை, ராயம்பேட்டை மஹாமஹோபாத்யாய க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ஆனந்த பரமகாஷ்டையை யடைந்து ஆர்யதர்மபத்ரிகையில் அடியேனுடைய ஆராய்ச்சியை ப்ரசம்ஸித்தும் சேட்லூராருடைய அரஸிகத்வத்தையிகழ்ந்தும் மாத்ஸர்யகந்தமுமில்லாமல் எழுதி வெளியிட்டிருக்கிறார். அந்த பத்ரிகை அழிந்திலது அத்யாபி ஸுரக்ஷிதம். அந்த க்ருஷ்ணமாசார்யர் ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமியின் திருவடியே. இந்த யதாவஸ்தித பாடத்தை அடியேன் எடுத்துக்காட்டினதற்காக, அடியேனிடத்தில் இடையில்கொண்டிருந்த வைரத்தை ஸவாஸநமாக விட்டிட்டு " अयं जनः श्रीमद्भिः प्राणनिर्विशेषोऽभिमन्तव्यः" என்று திருமுகம் விடுத்து உள்குழைந்து பரிமாறினார். ப்ரஸங்காத் இவ்வளவும் இங்கு எழுதலாயிற்று. இப்படி ரஸிகவித்வான்கள் உகந்துகொண்டாட நின்ற இவ்விஷயத்திலே ஸ்ரீகோழியாலம் ஸ்வாமி அத்யந்தமபிநிவேசத்தோடு "ஸாந்ம்ய என்கிற பதம் இங்கு ஸர்வாத்மநா இருக்கவே தகாது" என்கிறார். இங்ஙனே அபிநிவிஷ்டராய் உறுத்தி யெழுதுவதற்கு என்ன காரணமென்னில், பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீஸூக்தியை யநுஸரித்து தேசிகன் ஸாதித்தாரென்று தேறிவிடுகிறதேயென்கிற அவஸாதமேயாம். இதற்கு யார் என் செய்வது! தேசிகன் த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவலியருளிச் செய்தபோது பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்தினாலாயிரப்படியையே தழுவிப் பெரும்பாலுமருளிச் செய்திருக்கிறாரென்பதை அவிசால்யமாக ஸஸாக்ஷிகமாய் நிரூபித்திருக்கிறோம். அதுநிற்க. ஸ்தோத்ரபாஷ்யத்தையே யெடுத்துக்கொள்வோம்; ஒவ்வொரு ச்லோகத்தின் பாஷ்யத்தையும் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தை உடன்கொண்டு ஸேவித்தால், அவருடைய வியாக்கியான ஸரணியை தேசிகன் எவ்வளவு தழுவியிருக்கிறார் என்பது அநாயாஸமாக விளங்கும். *நமோ சிந்த்யாத்புத* என்கிற முதல் ச்லோகத்திலிருந்தே பார்க்கலாம். பெரியவாச்சான்பிள்ளை உதாஹரித்தருளுகிற ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களை நூற்றுக்கு எண்பது பங்கு விடுவதில்லை தேசிகன். இது அநுமாநமன்று, உத்ப்ரேக்ஷையன்று, உல்லேகமன்று. இரண்டு ஸ்ரீகோசங்களும் ஸுலபமேயிறே, துர்லபமன்றே. எடுத்துப் பரீக்ஷிக்கலாமே. ப்ரமாணங்களைக் கொள்வது மாத்திரமேயன்று. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திற்காணும் இன்சுவைமிக்க பொருள்களை அப்படியே தழுவிக்கொள்வதையும் காணலாம். இதற்கு நூறிடங்கள் எடுத்துக்காட்டலாம்; ஆயினும் இங்குச் சிலவிடங்களையே காட்டுகிறேன்; முதல் ச்லோகத்தில் * ஜ்ஞாந வைராக்யராசயே * என்றவிடத்தில் வாரிராசி:, ஜலராசி: இத்யாதிஸ்தலங்களிற்போல ஜ்ஞாநவைராக்யங்களுக்கு ராசியாயிருப்பவர் என்கிற பொருளே எல்லார்க்கும் தோன்றக்கூடியது. இது ஸங்கதமான பொருளேயன்றி அஸங்கதமான பொருளன்று. இவ்வகைப்பொருளை முந்துறப் பணித்தார்தேசிகன்; இங்கே பெரியவாச்சான்பிள்ளை பஹுவ்ரீஹியை விவக்ஷித்து, ராசி யென்பதற்கு ஸமூஹப்பொருளைக் கொண்டு ஜ்ஞான ஸமூஹங்களையும் வைராக்ய ஸமூஹங்களையுமுடையவர் என்றுரைத்து ஜ்ஞானமும்

வைராக்யமும் ஒன்றாயிருக்க ராசியென்னலாமோவென்று சங்கித்துக்கொண்டு, பகவத் ஸ்வரூபாதிகள் ஜ்ஞான விஷயங்களாகையாலே பல; த்யாஜ்ய விஷயங்களும் பலவாகையாலே வைராக்யங்களும் பலவென்று சொல்லலாம்' என்று அருளிச் செய்திருக்கிறார். தேசிகன் பாஷ்யத்தில் இதை அப்படியே மொழி பெயர்த்திருக்கிறார்; "अचिन्त्यत्वादि-विशिष्टौ ज्ञानवैराग्यराशी यस्येति बहुव्रीहिर्वा ; तदातु ज्ञानवैराग्ययो: प्रत्येकं विषयानन्त्येन भेदमनुसन्धाय राशित्वक्लृप्ति:" என்பது தேசிக பாஷ்ய ஸூக்தி. மேலே * அகாதபகவத் பக்திஸிந்தவே * என்றவிடத்திலும் பக்திக்குக் கடலாயிருப்பவர் என்று பொருள் கொள்ளாமல், * காதல் கடல் புரைய விளைவித்த * காதல் கடலின் மிகப் பெரிதால் * இத்யாதி திவ்ய ஸூக்திகளுக்குச்சேர பக்தியைக் கடலாக ரூபித்து அகாதமான பகவத் பக்திஸிந்துவையுடையவர் என்று உரைத்தார் பெரியவாச்சான் பிள்ளை; தேசிகன் அதைத்தழுவி "भक्तिं वा सिन्धुत्वेन रूपयित्वा बहुव्रीहि:" என்று பணித்தார். * ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே * என்றவிடத்தில் லோகே என்பதற்கு (ஸம்ஸாரி ஜநே) என்று முதலில் ஸாமாந்யமாகப் பொருள் பணித்த தேசிகன் (லோகே—சாஸ்த்ரத்தில்) என்றுள்ள பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தை ஸேவித்து "அதவா, லோக்யதே அநேநேதி லோக:—ப்ரமாணம். தஸ்மிந். அத்ர சாஸ்த்ர ரூபப்ரமாண விசேஷவிவக்ஷா" என்றருளிச்செய்தார்.

"வசீ வதாந்யோ குணவாந் * என்ற ச்லோகத்தில் அநுபவிக்கப்பட்ட பன்னிரண்டு திருக்குணங்களையும் விவரித்தருளாநின்ற தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தையே ப்ராயேண மொழிபெயர்த்திருக்கின்றார். இப்படி அதுவிதுவுதுவென்று எடுத்துக்காட்டவேண்டுமோ? ப்ரக்ருத ச்லோகத்தையே யெடுத்துக்கொள்வோம். அதாவது (ஸாந்த்ய போகப்ரதாநே) என்கிற விவாதாஸ்பதமானபதம் எந்தச்லோகத்தின் வியாக்கியானத்திலுள்ளதோ அந்த * அசிந்த்யதிவ்யாத்புதேத்யாதி ச்லோகத்தையே கொண்டு உபய வியாக்கியானங்களையும் பரிசீலிப்போம். இந்தச்லோகத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை இட்டருளின அவதாரிகையையே சிறிது பெருக்கி மொழிபெயர்த்திருக்கிறார் தேசிகன். பக்தஜநைக ஜீவிதம் என்பதற்கு-பக்த ஜநங்களுக்கு தாரகாதிகளெல்லாம்தானேயாயிருக்குமவன் என்றும், பக்த ஜநங்களையே தனக்கு தாரகமாகவுடையவன் என்றும் இரண்டுவிதமாகப் பொருள் பணித்தார் பெரியவாச்சான்பிள்ளை: தேசிகனும் அப்படியே "भक्तजनानां प्रधानजीवितम् ; यद्वा भक्तजना एव जीवितं यस्य स तथोक्त:" என்று பாஷ்யமிட்டருளினார். இதற்கு அடுத்தது ஸமர்த்தம் என்பது. இதற்கு பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தை யநுஸரித்தே பாஷ்யமுள்ளதென்று கீழே உபபாதித்தோம். இங்கு வேறுவிதமாக தேசிகஸூக்தியிருக்க ஔசித்யலேசமுமில்லையன்றோ.

இதற்குமேல் ஸ்வாமிபோல்வார் ஸாதிக்கக்கூடியதொன்றுண்டு; பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தைத் தழுவி தேசிகன் வியாக்கியானம் அவதரித்ததென்று எதுக்கு இசையவேண்டும்? தேசிக வியாக்கியானத்தை அநுஸரித்தே பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானித்தார் என்கிறோமென்று. இப்படிச்சொல்ல நெஞ்சாலும் நினைக்க முடியாதபடியன்றோ தேசிகனுடைய ஸ்தோத்ரபாஷ்யம் அமைந்திருக்கிறது. இடையிடையே பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளுக்கு அபிப்ராய வர்ணநம் செய்தருளுகிறார்; சிலவிடங்களில் மறுப்புமெழுதுகிறார். இரண்டுக்கும் இரண்டிடமே காட்டுவோமிங்கு. * மம நாத யதஸ்தி * என்ற ச்லோகத்திற்கு அவதாரிகையிடுகின்ற

பெரியவாச்சான்பிள்ளை, "பண்ணின ஆத்மஸமர்ப்பணத்தை அநுசயிக்கிறார்" என்றருளிச்செய்து, மேலே ச்லோக வியாக்கியானத்தின் முடிவிலும் "ஸம்ஸார பீதியாலே ஸமர்ப்பிக்கையும் ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞானத்தாலே அநுசயிக்கையுமாக இரண்டும் யாவந்மோக்ஷம் அநுவர்த்திக்கக்கடவது." என்று தலைக்கட்டினார். இங்கு ஸ்தோத்ர பாஷ்யத்தில் अत्र पूर्वकृतस्वात्मसमर्पणानुशयेन तदेव प्रतिक्षिप्यत इति पक्षस्तु अप्रतिबुद्धानामात्मसमर्पणमभिप्रेत्योक्तिः என்று அபிப்ராய வர்ணனமுள்ளது. * நந்வேந யச் சிதசித் ச்வரதத்ஸ்வபாவ போகாபவர்க்க * என்றவிடத்தில் கைவல்யமோக்ஷத்தையும் அபவர்க்க சப்தார்த்தமாக இட்டு வியாக்கியானித்தருளினார் பெரியவாச்சான்பிள்ளை; தேசிகன், அதற்கு முந்தியுள்ள भोग பதத்திற்கே கைவல்யத்தையும் அர்த்தமாக்கியுரைத்து (அதாவது) भोग इह स्वर्गस्वाराज्यादिसुखानुभवः स्वात्मानन्दानुभवश्च என்றுரைத்து, உடனே तस्मिन् मुक्तिशब्दं केचिदुपचरन्ति என்று தொடங்கி விவரணமுகேந மறுப்பு முரைத்தார். ஆக இவ்விமர்சம் செய்யவல்லவர்கள் ஸ்தோத்ர பாஷ்யத்திற் காட்டிலும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமே மிக முற்பட்டதென்று இசைந்திடுவர்கள். பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செயல் வியாக்கியானங்களை ரஸகநமாக அருளிச்செய்தவராகையாலே அந்த ப்ரணாளியை அவர் ஸ்தோத்ர வியாக்கியானத்திலும் ஆங்காங்கு இணைக்கிறார்; இதையும் தேசிகன் அப்படியே கைப்பற்றுகிறார். இதற்கும் ஓரிடம் காட்டுகிறேன். * (54) அவபோதிதவாந் இமாம் யதா* என்றவிடத்தில் இமாம் என்பதற்கு (இந்த) என்னுமிவ்வளவே பொருள் சொல்லக்கடவர்கள் கேவல ஸம்ஸ்க்ருத வித்வான்கள். பெரியவாச்சான்பிள்ளையோ வென்னில்; "இமாம் என்று சேஷத்வத்தின் இனிமையாலே கொண்டாடுகிறார்" என்று இன்சுவைப்பொருள் பணித்தார். தேசிகன் இச்சுவையில் மிக ஈடுபட்டு इमाम्-अदृष्टपूर्वतया अद्भुतत्वेन स्वादुतया अनुभूयमानाम् என்று விலக்ஷணமான தததநுவாதத்தைச் செய்தருளினார். அடியேன் ஒருஸமயம் உபய வியாக்கியானங்களையும் யுகபத் பதம்பதமாக விவரித்து பிரவசனம் செய்ய பாக்யம் பெற்றேனாதலால் இவ்வாராய்ச்சிகளை இன்றாகச் செய்யாமல் பண்டே செய்துவைத்திருக்கிறேன். பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களை ஸேவித்ததனால் தேசிகனுக்கு விலக்ஷணமானவொரு ராஸிக்ய முண்டாயிருக்கிறதென்பதை அடியேன் விஜ்ஞாபியாமலிருக்க முடியவில்லை. ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஆதரமுடையார் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை வெறுப்பவர்களாயும், அதில் ஆதரமுடையவர்கள் ஸ்தோத்ரபாஷ்யத்தை வெறுப்பவர்களாயுமே பெரும்பாலுமுள்ளார்கள். இதுவொரு சாபம்போலும். க்ஷீரம் சர்க்கரயேவ" (தசாவதார ஸ்தோத்ரே) என்று தேசிகனருளிச் செய்கிற கணக்கிலே பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் க்ஷீரமாயும் ஸ்தோத்ரபாஷ்யம் சர்க்கரையாயுமன்றோ தோன்றியுள்ளது. வெறும் பாலையும் வெறும் சர்க்கரையையுமுண்கிற மற்றவர்களைப் போலன்றிக்கே இரண்டையும் சேர்த்து அநுபவிக்கப் பிறந்த அடியேன் எய்தும் பேரின்பம் தொல்லையின்பத்தினும் சீரியதன்றோ. உத்தமாச்ரமியாய் மஹாரஸிகராயெழுந்தருளியிருந்த (திவங்கதரான) ஸ்ரீமத்பரமஹம்ஸ. இளங்காட்டுஸ்வாமி சென்னைத் தொண்டைமண்டலம் மஹோபந்யாஸசாலையில் எழுந்தருளியிருந்து ச்ரவணாநந்த மநுபவிக்க மிக்க குதூஹலங்கொண்டு அந்த குதூஹலம் நிறைவேறப்பெற்று "நெடுநாள் ஊறிக்கிடந்த ப்ரமமெல்லாம் இன்று தொலையப்பெற்றேன்" என்று பல்லாயிரவர் முன்னிலையில் பேசியுகந்தார். அப்படியே ஸ்ரீகோழியாலம்ஸ்வாமியையும் ஒரு நாளைக்காவது எம்பெருமான் அந்த ஆஸ்தானத்திலே கொண்டு சேர்த்து க்ருதக்ருத்யனாகவேணுமென்று அஸக்ருத் பலர் பேசிக்கொள்வதுண்டு."

"விவாதாஸ்பத ஸ்தோத்ரபாஷ்யஸ்தலத்தில் ஸ்வாத்மப்ரதாநே என்றே, ஸ்வாத்ம போகப்ரதாநே என்றே பாடமிருந்திருக்குமேயொழிய ஸாத்ம்யபோகப்ரதாநே என்றிருக்க ஸர்வாத்மநா தகுதியில்லையென்று ஸ்ரீகோழியாலம்ஸ்வாமி ஆக்ரஹிப்பது வித்வத் கோஷ்டிகளில் விலைசெல்லாதேயென்று வருந்துகிறேன். இங்கு ஸ்வாமி முக்கியமாக ஸாதிப்பது என்னவென்றால்—இங்கு ஸ்தோத்ரபாஷ்யத்தில்*பரித்ராணயேத்யாதி ப்ரமாணமெடுத்திருக்கிறதே; ஸாத்ம்யபோகப்ரதாநத்திற்கும் பரித்ராணயவுக்கும் என்ன ஸம்பந்தம்? என்று.— இதற்கு விஜ்ஞாபிக்கிறேன். நூற்றுக்கால் மண்டபத்தில் நடந்த வாக்யார்த்த சர்ச்சையில் இவ்விஷயமும் ப்ரஸ்துதமாயிற்று. த்ருப்திகரமாக உபபாதித்தேன். மத்யஸ்த வித்வான்கள் கேட்டு 'ஸூக்ஷ்ம நிபுணவிமர்சமிது' என்று போரவுகந்தார்கள். அதை இங்கும் உபபாதிக்கிறேன். ஸாத்ம்ய போகப்ரதத்வமாவது என்ன? என்று முன்னம் தெரிந்துகொள்ளவேண்டும். திருவாய்மொழியில் (4-5-5.) * ஆற்ற நல்லவகைகாட்டு மம்மான் * என்று ஆழ்வார் தாமே இதைக் கூறியுள்ளார். ஆற்ற—பொறுக்கப் பொறுக்க என்றபடி. எம்பெருமான் ஸம்ஸாரிசேதநர்க்கு அனுபவிக்கும் போகங்களை ஏககாலத்திலேயே அபரிமிதமாக அநுபவிக்கக் கொடுத்தருளினால் அது அநுபோக்தாக்களுக்கு பயன் படாது; அங்ஙனன்றிக்கே சிறுகச்சிறுக அநுபவிப்பிக்குமதுதான் ஸாத்ம்ய போகப்ரதாநமென்பது. ஒரே ஸமயத்தில் கொட்டிவிடாமல் க்ரமேண ஸமயங்களில் கொடுக்கையாம் இது. கீழேயெடுத்துக்காட்டிய * ஆற்ற நல்லவகைகாட்டுமம்மானை * என்கிற பாசுரத்தின் கருத்தை தாத்பர்ய ரத்நாவளியில் ஸாரமாக ஸங்க்ரஹித்தருளாநின்ற தேசிகன் "ததுசிதஸமயாச்வாஸதாநப்ரவீணே" என்றார். அவ்விடத்திற்கு வியாக்கியானம் வருமாறு:—"அவர்களை ஸமயமறிந்து ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்குமவனாய்" என்று. ஆக, அநுபவங்களை க்ரமேண கொடுத்தருளுகையே ஸாத்ம்ய போகப்ரதாநமென்றதாயிற்று.

இனி, பரித்ராணாய ஸாதூநாம் என்ற கீதாச்லோகத்தின் பாஷ்யத்தையும் தாத்பர்ய சந்த்ரிகையையும் உற்று நோக்குவோம். மத்ஸ்வரூப சேஷ்டிதாவலோகநாலாபாதி தாநேந தேஷாம் பரித்ராணாய" என்பது கீதாபாஷ்யஸூக்தி. பகவதவதாரம் ஸம்ஸாரிகளின் த்ராணத்திற்காக வன்று; ஸாதுக்களின் பரித்ராணத்திற்காக. பரி என்னுமுபஸர்க்கத்தோடு கூடின த்ராணத்தை ஸ்வாமி மத்ஸ்வரூபேத்யாதியாலே விவரித்தருளினார். அங்கு தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி அருளிச்செய்திருப்பது அற்புதம்; "स्वविश्लेषपरिक्लिष्टानामुज्जीवनाय प्रवृत्तस्य क्रमात् भक्तानुभाव्याकारा उच्यन्ते—मत्स्वरूपचेष्टितावलोकनालापादिदानेनेति" என்பது தேசிக திவ்யஸூக்தி. இதில் க்ரமாத் என்பதுதான் உயிரான சொல். எம்பெருமான் தனது ஸ்வரூபாவலோகனதாநம், சேஷ்டிதாவலோகன தாநம், ஆலாபதாநம் (அதாவது ஸம்பாஷித்தல்). ஆதிபதக்ராஹ்ய—ஸூகாடபரிஷ்வங்க ப்ரதாநாதிகள் ஆக இவற்றையெல்லாம் நினைத்தபோதே ஒரேக்ஷணத்தில் கொடுத்துவிடாமல் ஸாத்மிக்க ஸாத்மிக்க க்ரமேண கொடுத்தருள்வதுதான் ஸாது பரித்ராணமென்று பாஷ்யகாரர் திருவுள்ளம்பற்றினதாக தேசிகன் விவரித்திருப்பது அபலபிக்கமுடியாமலிருக்கிறது. இதே அர்த்தத்தைத்தான் பெரியவாச்சான்பிள்ளை ஸமர்த்தமென்றவிடத்திற்கு அருளிச்செய்திருப்பது; அதையேதான் ஸாத்ம்யபோகப்ரதாநே ஸமர்த்தமென்று ஸ்தோத்ரபாஷ்யத்தி லருளிச்செய்திருப்பது."

"ஸாத்ம்ய போகப்ரதாநத்திற்கும் * பரித்ராணாயவென்கிற ப்ரமாணத்திற்கும் கஸ்ஸம்பந்தஃ என்கிற ஸ்ரீகோழியாலம்ஸ்வாமி இப்போது ஸங்கிக்ருஷ்ட ஸம்பந்தத்தை நன்கு அறிந்தருளியாயிருக்குமே. தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸூக்தியைப்

பின்சென்று ஸாதித்தாரென்று ஒப்புக்கொண்டு விடுவதா? என்று பரமஸாத்விகரும் உத்தமாச்ரமியுமான இந்த ஸ்வாமி எண்ணுவதும், · किं बहुना सात्म्यभोगप्रदानमत्र न सर्वात्मना विवक्षामर्हतीत्यलम् என்று எழுதுவதும் தகாது தகாது தகாது. தருமென்னில் யாவத் சரீரபாதம் ஆவயோ: இவ்விஷயமொன்றிலேயே வாதப்போர் நடக்கலாம். இதில் ஒரு முடிவு ஏற்படவேண்டியது ஆவச்யகம். இதில் அடியேனுடையவாதம் அஸமஞ்ஜஸமென்று தேறிவிட்டால் இதுபோலவே எனது ஸகல வாதங்களும் அஸமஞ்ஜஸமேயென்று இசைந்து கைகூப்பி நிற்பேன். அடியேனுடைய ஒவ்வொரு நிரூபணமும் இங்ஙனே ஆழ்ந்து ப்ரமாண புஷ்கலமாகத்தானிருக்கும். ஸ்ரீமத்ஸ்வாமி திருவுள்ளத்திற்குத் தத்துவம் தெளிவதற்காக இவ்வளவு விவரித்து எழுதலாயிற்று. அரிய பெரிய ஆழ்பொருள்களும் இன்சுவைமிக்க பொருள்களும் நம்பிள்ளைவழியாகப் பெரியவாச்சான்பிள்ளையிடத்தும் வடக்குத்திருவீதிப்பிள்ளையிடத்தும் குடிகொண்டன. வடக்குத் திருவீதிப்பிள்ளை பட்டோலைகொண்டவை தேசிகன் காலத்தில் வெளிவர ப்ரஸக்தி நேராமையால் பெரியவாச்சான்பிள்ளை எழியருளப்பண்ணின திவ்யார்த்தங்களின் ஸௌரபமத்தனையும் தேசிக திவ்யஸூக்திகளிலே வீசப்பெற்றது. नहि कस्तूरिकामोदः शपथेन निवार्यते."

17. ஆகக் கீழே உதாஹரித்த ஆராய்ச்சிப் பகுதிகளெல்லாம் அண்ணங்கராசாரியருடையவை. இவற்றை ஊன்றி விமர்சிக்குங்கால் "இவை என்ன அற்புதமான விமர்சங்கள்! எவ்வளவு ஆச்சரியமான ஆராய்ச்சிகள்?!" என்று ப்ராமாணிக விவேகிகள் விஸ்மயப்படுவது தவிர வேறென்று செய்யமுடியுமோ? இவற்றையெல்லாம் ஆழ்ந்து கடாக்ஷித்தருளின ஸ்ரீமத் கோழியாலம்ஸ்வாமி திருவுள்ளம் பூரித்து ஸாதித்த வார்த்தைகளும் ஸ்ரீராமாநுஜன் 47ல் பக்கம் 20ல் பிரசுரமாகி யிருக்கின்றன. "बोद्धारो मत्सरग्रस्ताः" என்று பர்த்ருஹரி சொல்லிவிட்டாலும் சில ஸமயங்களிலாவது மத்ஸரத்தை விலக்கித் தள்ளுகிற விவேகிகளும் இந்நிலத்தில் விளங்கிக்கொண்டுதா னிருக்கிறார்கள். வேதாந்தவாரியருடைய ஸ்ரீஸூக்திகளில் இவ்வளவு ஆழங்காற்பட்டு விஷயதத்வங்களைக் கண்டறிந்து பொருத்தமாக எடுத்துக்காட்ட வல்லவர் அண்ணங்கராரியரைத் தவிர்த்து வேறொருவர் இருப்பதாகப் புலப்படவில்லையென்று நானொருவனேயன்று; நிஷ்பக்ஷபாதர்களான பலரும் சொல்லுவர்கள். ஈதொன்று கேண்மின். யதிராஜஸப்ததியில் "रसपरिमलश्लाघाघोषस्फुटस्पुटभेदनं लवणवणिजः कर्पूरार्घं किमित्यभिमन्वते" என்றிப்படியாகவே ஒரு பாடம் பலருடைய அநுஸந்தானத்திலும் அச்சுப்பதிப்புகளிலும் வந்துவிட்டது. இது அநந்விதமென்பது வித்வான்களுக்கு எளிதில் தெரியக்கூடியதே. ரஸபரிமளச்லாகைகள் கற்பூரத்திற்கு இணங்குமேயல்லது கற்பூரத்தின் விலைக்கு இணங்

காது. ச்லோகத்திலோவென்னில் कर्पूरार्घ்மென்பது விசேஷ்யமாக வுள்ளது. ரஸபரிமளேத்யாதி விசேஷணம் இந்த விசேஷ்யத்தில் எப்படி அந்வயிக்கும்? என்பது விமர்சிக்கப்படாமலிருந்தது. இந்த விமர்சம் அண்ணங்கராரியருடைய பத்திரிகைகள் மூலமாக வெளி வந்தது. कर्पूरोद्गम् என்கிற ஸமஞ்ஜஸமான பாடமும் வெளிவந்தது. இதில் அநுபபத்தி சொல்லமுடியாது, தவருக வந்த பாடத்தில் உபபத்தி சொல்லமுடியாது. 'இவர் தெரிவித்தா நாம் திருத்திக் கொள்ளுவது!' என்கிற வீணன அவலேபத்தினுல் விவேகிகளுங் கூட வீண்விவாதத்தை வளர்த்தினுர்கள். கடைசியாக இதுதான் ஸுபாடமென்று இசையவேண்டியதாயிற்று. பாம்பே நகரத்தி லுள்ள ஸ்ரீ வேதாந்த தேசிக ஸம்ப்ரதாய ஸபையின்மூலமாக ஸமீப காலத்தில் வெளியிடப்பட்ட ஸ்தோத்ரத் தொகுதியில் அண்ணங்க ராரியர் காட்டின ஸுபாடமும் அச்சேறி நிற்கிறது. "उत्पत्स्यते मम तु कोऽपि समानधर्मा कालो ह्ययं निरवधिर्विपुला च पृथ्वी" என்று பவபூதி மஹா கவி சொன்னது அண்ணங்கராரியர் விஷயத்தில் நம் கண்ணெ திரே ஸபலமாகக்காணு நின்றுமென்று உகந்து சொல்லுகிற விவேகிகள் பலருளர். குணத்தை குணமாக க்ரஹியாவிடில் கற்ற கல்விக்குப் பயனென்கொல்? அண்ணங்கராரியர் வேதாந்தவாரிய ருடைய க்ரந்தங்களில்மாத்திரம் ஆராய்ச்சி செய்புமவரல்லர். அவர் தமக்கு நிலமான ஸகல க்ரந்தங்களிலும் அவகாஹித்து ஆராய்ச்சிசெய்து வருகிருர். இதர க்ரந்தங்களிற் செய்யுமாராய்ச் சிகளை சிரஸா ச்லாகிக்குமவர்கள் வேதாந்தவாரியருடைய க்ரந்தங்க ளில் செய்யும் ஆராய்ச்சிகளைமட்டும் ஆக்ஷேபிக்கவும் நிந்திக்கவும் தலைப்படுகிருர்கள்.

18. இப்படிப்பட்டவர்களின் வகுப்பில் பலபேர்கள் இல்லை. யாரோ சிலர். அவர்களும் ஆராய்ச்சிகளைப் பரிபூர்த்தியாக ஆரா யாமலே வ்யக்தி த்வேஷத்தையே கொண்டு க்ஷேபிக்கிருர்கள். சில நாள் போராடி விஷயதத்வங்களை யுணர்ந்து நமக்கிது நிலமன்று என்று கைகூப்பி நிற்கிருர்கள். வேதாந்தவாரியருடைய அரு மருந்தான ஸ்ரீஸூக்திகளில் உள்ள நுட்பமான விஷயங்களைக் கண்டு களிப்பதற்கு பாக்கியம் செய்தவர்கள் மிகச் சிலர்கள். அவற்றையெடுத்துக் காட்டியூட்டினுலுங்கூட ரஸிக்கவில்லாமல் அதிக்ஷேபமே செய்கிறவர்களைப்பற்றி நாம் என்ன சொல்லுவது.

19. இழப்பவர்கள் இழக்கட்டும். அநுபவித்து ஆனந்திக்கப் பிறந்தவர்கள் பாக்யசாலிகள் என்றுதான் சொல்லவேண்டும். அப்படிப்பட்ட பாக்யசாலிகளுக்கே இன்னமும் பல விஷயங்களை யெடுத்துக் காட்டுகின்றேன் அண்ணஸ்வாமியின் ग्रन्थरत्नाकरेभ्यः ॥ ஸ்ரீ பாஷ்ய மங்களச்லோகத்தில் " विनतविविधभूतव्रातरक्षैकदीक्षे " என்பது இரண்டாம் பாதம். இங்கே ச்ருதப்ராகாசிகாசார்யர் ஒரு நிதி காட்டுகிறாரென்றும், அந்த நிதியை வேதாந்தவாரியர் தத்வடீகையில் ஸூசிதமாக்குகிறாரென்றும் அண்ணங்கராரியர் அற்புதமாக நிரூபிக்கிறார். **விநத**-வணங்கிய, **விவித**-பலவகைப்பட்ட, **பூதவ்ராத**-ப்ராணிஸமூஹங்களை. **ரக்ஷா**-ரக்ஷிப்பதையே, **ஏக தீக்ஷை**-முக்கியமான விரதமாகக் கொண்டவன் எம்பெருமான்-என்பது சப்தார்த்தம். இங்கு (பூதவ்ராத) என்றவிடத்தில் ச்ருத ப்ரகாசிகாசார்யருடைய நிரூபணம் ஸதாசார்ய ஸந்நிதியில் அவர்தாம் கேட்டபடியே அழகாக அமைந்திருக்கிறது. (அதாவது) **பூதவ்ராத**மென்பதற்கு ப்ராணிஸமூஹமென்று பொருளானாலும் இதில் சிறிது உட்புகுந்து ஆராய்ச்சி செய்யப்படுகிறது. **ப்ராஹ்மணஸமூஹம்** என்று சொன்னால் பிராமணர்களிற் காட்டிலும் வேறுபட்ட வ்யக்திகள் இங்குத் தோன்றுவதில்லை. பல ப்ராஹ்மணர்களின் திரட்சியையேயன்றோ ப்ராஹ்மண ஸமூஹமென்று வழங்குகிறோம். **'ராஜபரிஷத்'** என்றும் ஒரு சப்த வ்யவஹாரமிருக்கிறது. ப்ராஹ்மணஸமூஹமென்ற வ்யவஹாரம் போன்றதன்று இந்த வ்யவஹாரம். பல அரசர்களின் திரட்சியை ராஜபரிஷத்தென்று சொல்லுகிறோமல்லோம். மந்திரிகளும் ப்ரஜைகளுமாகிய இதரர்களும் அரசனோடு கூடியிருக்குமிருப்பையே ராஜபரிஷத்தென்கிறோம். ப்ராஹ்மண ஸமூஹ: என்றவிடத்திலும் ஷஷ்டீதத்புருஷஸமாஸமே கொள்ளுகிறோம். ராஜபரிஷத் என்றவிடத்திலும் அந்த ஷஷ்டீதத்புருஷஸமாஸமே தான் கொள்ளுகிறோம். ஸமாஸத்தில் வாசியில்லையாயினும் பொருளில் நெடுவாசியுள்ளது. **பூதவ்ராத**மென்னுமிவ்விடத்தில் ச்ருதப்ரகாசிகா ஸ்ரீஸூக்தியாவது :— " भूतसंबन्धी व्रातो भूतव्रातः । संश्रितसंबन्धिनोऽपि तत एव कारणात् भगवतो रक्ष्या इत्यभिप्रायः । ........ * पशुर्मनुष्यः पक्षी वा ये च वैष्णवसंश्रयाः । तेनैव ते प्रयास्यन्ति तद्विष्णोः परमं पदम् ॥ * " என்று. விநத விவித பூதங்களைமாத்திரம் ரக்ஷிக்கையன்றிக்கே விநதப்ராணிகளின் ஸம்பந்தத்தை யதாகதஞ்சித் பெற்றவர்களையுங்கூட முற்

சொன்ன விதர்களின் விநதியே காரணமாக ரக்ஷிக்கிருனெம்பெருமான் என்றதாயிற்று. இந்த ஸ்ரீஸூக்தியானது விநதிசெய்யவிருப்பமுடையாரைத் தடைசெய்ய மாட்டாது; விநதிசெய்தாலன்றிப் பேறுபெற முடியாதென்று கூறுகிற சாஸ்த்ரங்களைக் கண்டிக்கவும் மாட்டாது. கண்டிப்பதற்காக அவதரித்ததுமன்று. எம்பெருமானுக்குள்ளதானவோர் உண்மைப் பெருமையை மாத்திரம் வெளியிடவந்தது. இவ்வர்த்தத்தில் பகவத்பக்தர்கள் விரோதம் பாவிக்கக் காரணலேசமுமில்லை. தத்வடீகையில் வேதாந்தவாரியர் இவ்வர்த்தத்தை வெகு அழகாக உபபாதித்துப் பொருந்த வைக்கிருர். அவ்விடத்து ஸ்ரீஸூக்தியாவது— "भूतसंबन्धी व्रातः। अत्र तानि तदीयानि च। षष्ठ्या संबन्धसामान्योक्तेः। अन्यथा व्रातशब्द नैरपेक्ष्यात्। न ह्यत्र सत्रवत संहतानामेव प्रवृत्तिः फलावाप्तिर्वा।" என்பதாம். விநதவிவித பூதங்களோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமோ பரம்பராஸம்பந்தமோ ஏதேனுமொருபடி தொடர்புடையவர்களையும் எம்பெருமான் ரக்ஷித்தருளுகிருனென்று கொள்ளவேணும். ஸ்ரீபாஷ்யகாரர்க்கு இங்ஙனே விவக்ஷையில்லையாகில் இங்கே **வ்ராத** சப்தப்ரயோகம் பண்ணியிருக்கவே மாட்டார். இப்படி அர்த்தம் கொண்டால்தான் வ்ராதசப்தம் ஸப்ரயோஜநமாகும். இல்லையாகுல் **விவித** என்னும் சப்தத்தோடே புநருக்தமாகும்— என்பது தத்வடீகாகாரருடைய நிஷ்கர்ஷமாகத் தேறுகின்றது.

20. இவ்வர்த்தம் வேதாந்தவாரியருடைய ஸ்ரீஸூக்தியில் ஏறிட்டுக் காட்டப்படுவதன்று. ஸம்ஸ்க்ருதஜ்ஞா யார் பார்த்தாலும் இவ்வர்த்தமல்லது வேருேர் அர்த்தம் சொல்லமுடியாது. இதை அண்ணங்கராரியர் எடுத்துக் காட்டுகிருரென்பதே பிறர்க்கு ஸந்தாபஹேதுவாகிறது. ஆகவே அன்னவர்கள் வாளாவிருக்ககில்லாமல் எதையாவது எழுதுகிருர்கள். அதுவும் ஜகதப்யுதயத்திற்கேயாகிறது. ப்ரக்ருத விஷயத்தில் பிறர் எழுதினவற்றுக்கு மேல் அண்ணஸ்வாமி யெழுதியுள்ளவைகளையும் எடுத்துக் காட்டுகிறேன்.

"ஸாக்ஷாத்தாகத் தன்னை வணங்கினவர்களை மாத்திரமே எம்பெருமான் ரக்ஷிப்பன் என்றும், அவர்களோடு ஸம்பந்தம் பெற்றவர்களை ரக்ஷிக்கமாட்டானென்றும் சிலர் நினைப்பதுண்டு. (இதற்குக் காரணம் எம்பெருமானுடைய பெருமையை யறியாமையே யொழிய வேறில்லை.) இதற்குமேல் சிறிது தெளிவு பெற்றவர்கள் என்ன நினைக்கிருர்களென்னில்; விநதர்களை மாத்திரமே யல்லாமல் விநத ஸம்பந்திகளையும் ரக்ஷிப்பதுண்டு; ஆனால் அந்த ஸம்பந்தம் ஸாக்ஷாத்ஸம்பந்தமே யொழிய பரம்பரா ஸம்பந்தமன்று. தத்ய

பாஷ்யத்தில் "விபீஷணஸ்ஸாகந்த ராக்ஷஸஸ்யாயேந" என்றிருக்கையாலும், * பசுர் மநுஷ்ய: பக்ஷீ வா யேச வைஷ்ணவ ஸம்ச்ரயா: * இத்யாதி ப்ராமாணங்களுக்கு இவ்வளவே [ஸாக்ஷாத் ஸம்பந்தமே] பொருள் சொல்லப் பொருந்தாமையாலும் பரம்பரா ஸம்பந்திகளை [அவர்களுடைய தனிப்பட்ட விகதியில்லாமல்] எம்பெருமான் ரக்ஷிக்க மாட்டான் என்று நினைக்கிறார்கள். ப்ரபுத்தர்களில் தலைவரான ஸ்வாமி தேசிகன் எல்லையில்லாத பரம்பரையையே திருவுள்ளம்பற்றி யருளிச் செய்திருக்கிறார் என்பதை விளக்குவோம். ஸம்பந்தத்தைத் தெரிவிக்குமதான ஷஷ்டீ விபக்திக்கு எவ்வளவு சக்தி என்பதை முன்னம் பார்ப்போம். "தேவதத்தஸ்ய புத்ர:. தேவதத்தஸ்ய பௌத்ர:, தேவதத்தஸ்ய நப்தா" என்றிப்படி ப்ரயோகங்கள் இருப்பதை எங்குங் காணலாம். தேவதத்தனுக்குப் புத்ரனோடு தான் ஸாக்ஷாத் ஸம்பந்தமுள்ளது; பௌத்ர-நப்த்ராதிகளோடு பரம்பரா ஸம்பந்தமேயுள்ளது. நப்தாவளவன்றிக்கே ஆயிரந்தலைமுறை நடந்தபின் தோன்றியவொரு வ்யக்தியைக் குறித்தும் தேவதத்தஸ்ய அருக:, என்று சொல்லத் தடைகண்டிலோம். ஷஷ்டியொன்றே எல்லா வகையான ஸம்பந்தங்களையும் நிர்வஹிக்கின்றது. இதை மீமாம்ஸகர்கள் सप्तदशारत्निर्वाजपेयस्य यूपो भवति இத்யாதிகளில் நிரூபித்திருக்கிறார்கள். ஆக, ச்ருத ப்ரகாசிகாகாரரும் தத்வடீகாகாரரும் இட்டிருக்கிற ஸம்பந்த சப்தம் ஒரு அளவுபட்ட ஸம்பந்தத்தைக் காட்டுவதன்றிக்கே அபரிச்சிந்நமான ஸம்பந்தத்தைக் காட்டத் தடையற்றதென்று முடிந்தது."

"இவ்விஷயத்தை தேசிகன் ஸுஸ்பஷ்டமாக எழுதி வைத்தருளியிருப்பதை இனி விவரிப்போம். ந்யாஸதிலக மென்கிற க்ரந்தம் அதிவாதங்களைக் கொண்டதன்றிக்கே மிகச் சிறந்த சாஸ்த்ரார்த்த க்ரந்தம். அதை ரஹஸ்யங்களிலும் அடிக்கடி காட்டி யருளுகிறார். அதில் * अन्धोऽनन्धग्रहणवशगः என்கிற ச்லோகத்தை விசேஷித்து அடிக்கடி தாமே யெடுத்துக்காட்டி "இதை அநுஸந்திப்பது" என்று நியமித்திருக்கிறார். அந்த ச்லோகத்தில் என்ன விசேஷமிருக்கிறதென்பதைத் தெரிந்துகொள்ள அருமையில்லை. இந்த ச்லோகத்தில் மூன்று த்ருஷ்டாந்தங்கள் காட்டியுள்ளார். [அந்தோநந்த க்ரஹண வசகோ யாதி] கண் தெரியாத குருடன் கண் தெரிந்த வொருவன் கையைப் பிடித்துக்கொண்டு ஸ்வப்ராப்ய பூமியிற் சென்று சேருவதுபோல—என்று இது முதல் த்ருஷ்டாந்தம். [பங்குர் நௌகா குஹர நிஹிதோ நீயதே நாவிகேந] இருகாலுமில்லாத முடவன் ஓடக்காரனால் தோணியில் உட்கார வைக்கப்பட்டு ஸ்வப்ராப்ய பூமியிற் சென்று சேர்வதுபோல—என்று இது இரண்டாவது த்ருஷ்டாந்தம்." "இனி மூன்றாவது த்ருஷ்டாந்தமே உயிரானது. [भुङ्क्ते भोगान् अविदितनृपस्सेवकस्यार्भकादिः] ஒருவன் (அமாத்யன்) நெடுநாள் ராஜஸேவை பண்ணி விபுலமான பொருள்களை யீட்டி நிதி சேமித்து வைத்திருந்தால் அதை [அதன் வட்டியை] அவ்வமாத்யனுடைய புத்ர பௌத்ர நப்த்ரு பரம்பரையிலே வருபவர்கள் நீண்டகாலம் அநுபவித்து வருவதுபோல- என்று காட்டி யிருக்குமிந்த த்ருஷ்டாந்தம் தேசிகன் தவிர மற்றொருவருடைய புத்திக்கு எட்டாதது. இது வெகு ஆச்சரியமான த்ருஷ்டாந்தம். எடுத்துக்காட்டின சாதுர்யத்தை நினைக்க நினைக்க நெஞ்சு நீர்ப்பண்டமாகின்றது. ஸாராஸ்வாதிநீகாரர் "ஜ்ஞாநாபாவத்துக்கு முதல் த்ருஷ்டாந்தம்; சக்த்யபாவத்துக்கு இரண்டாம் த்ருஷ்டாந்தம்; உபயாபாவத்துக்கு மூன்றாம் த்ருஷ்டாந்தம்" என்றிவ்வளவே உரைத்தனர். இங்கு "அவிதிதந்ருப:" என்கிற விசேஷணத்தை ஸ்வாமி எதற்காக இட்டருளினர் என்கிற விசாரத்திலே ஒருவரும் புகுந்திலர். * புங்க்தே போகாந் ந்ருபதிஸவிதே ஸேவகஸ்யார்ப்பகாதி: * என்றாவது, ந்ருபதி ப்ரஸ்தாவமே யில்லாமலாவது ச்லோகமியற்றி யிருக்கலாமே;

*அலங்காரঃ பரிகரஸ் ஸாபிப்ராயே விசேஷணே* என்ற லக்ஷணத்தின்படி அணிபெறவன்றோ இவ்விசேஷணமிட்டிருப்பது. ராஜ ஸேவை பண்ணிப் பொருள்படைத்த அமாத்ய னுடைய சிசு முதலானோர் முக்திகல்பமான போகங்களை யநுபவிக்குமிடத்தில் இந்த மக்களும் ராஜஸேவை பண்ணவேணுமென்பதில்லை; அரசனைக் கண்ணால் காண்பது தானும் அபேக்ஷிதம்.''

"ராஜஸேவைபண்ணிப் பொருளீட்டிச் சேமித்து வைத்தவனோ ப்ரதானனானவொருவன்; அவனோடு குடல் துடக்குடையாரெல்லாரும் ராஜஸேவைபண்ணாமலும் ராஜமுக நிரீக்ஷணங்கூட இல்லாமலும் பலபல போகங்களை யநுபவிக்கக் காணாநின்றோம். இந்த த்ருஷ்டாந்தம் காட்டி யிருக்கின்ற ஆசிரியருடைய திருவுள்ளம் - எம்பெருமானை யநுவர்த்தித்து ஆசார்யஸார்வ பௌமர் ஸம்பாதித்துச் சேமித்து வைத்த அருளென்னும் பொருளை அவருடைய அநுபந்திகள் அனைவரும் அவ்வநுபந்த மாத்ரமேயடியாக பகவதநுவர்த்தந நிரபேக்ஷர்களாய்ச் செவ்வனே யநுபவிக்கக் கடமைப்பட்டுள்ளார்கள் என்பதே.''

"மற்றுமொன்று குறிக்கொள்க. काकेभ्यो दधि रक्ष्यताम् இத்யாதி ஸ்தலங்களில் சாஸ்த்ரஜ்ஞர்கள் அஜஹல்லக்ஷணையென்று கொண்டு काकपदं दध्युपघातके बिडालादौ लाक्षणिकम् என்பர். அதுபோல *அவிதிதந்ருப:* என்னுமிடத்தில் ந்ருபபதம் தத்ஸேவகனை அமாத்யனையும் காட்டித்தீரும். अविदितनृपश्च अविदितसेवकश्चेत्युक्तं भवति॥ *புங்க்தே போகாநித்யாதியானவிது லௌகிக த்ருஷ்டாந்தமே யாதலால் லோகத்ருஷ்டிக்கு அநுகுணமாகவே பொருள் கொள்ள வேண்டுதலால் இது மிகவும் பொருந்தும். ராஜஸேவகனீட்டின பொருளைக்கொண்டு போகங்களை யநுபவிக்கின்ற அவனது வம்சத்தவர்கள் அரசனைக் கண்டிருக்க வேண்டாமை போலவே ராஜஸேவியான ஸ்வமூல புருஷனையும் கண்டிருக்க வேண்டாவே. இவ்விஷயத்தை அகாமதோபி இசைந்து தீரவேணுமே. இசையாததனால் நமக்கொரு ஹாநியுமில்லை. இசையவேண்டா. மூலத்தில் சப்த ஸந்நிவேசமுள்ளவகையில்—ஆசார்ய ஸார்வபௌமரோடு ஸம்பந்தி ஸம்பந்தி ஸம்பந்தி... ஸம்பந்தம் பெற்றவர்களும் அநுபந்தமாத்திரமே பற்றாசாகப் பேறுபெற்றே தீருவர்கள் என்னுமிடமும், அவர்கள் அவ்வாசார்யனுடைய ஸம்பந்த மொன்றையே பெற்றிருக்க வேணும் [அதாவது மூல புருஷனைக் கொண்டிருக்க வேணும்] என்னுமிடமும் நன்கு காட்டப்பட்டதாயிற்று.''

"*ஸேவகஸ்ய ஆத்மஜாதி:* என்றதே *अर्भकादि:* என்றதிலும் ஓர் அற்புதமான அர்த்தம் அமைந்துளது. அதுதான் ஜீவாதுயானது. கேண்மின். முன்பாதங்களில் நிர்திஷ்டர்களான குருடனும் முடவனும் வழி தெரிந்து தாமே நடக்க முடியாதவர்களானாலும் 'என்னை வழி நடத்தியருள வேணும்' என்று வாய்திறந்து இரந்து நிர்ப்பந்திக்க வல்லவர்களே யென்பது நிர்விவாதம். அங்ஙனே வாய் திறக்கவும் வல்லமையற்ற சிறு குழந்தையை [அர்ப்பகனை] முடிவாக த்ருஷ்டாந்தீகரித்ததனால், அதுபோலே நாம் ப்ரார்த்தனையும் செய்யா திருக்கவேணு மென்றும் அபேக்ஷாநிரபேக்ஷமாகத் தானே பேறு வந்தே தீருமென்றும் தெரிவித்தபடி. தேசிக திவ்ய ஸூக்தியாதலால் இன்னமும் ஆழ்ந்து ஆராய்ந்தால் சீரிய பொருள்கள் பல பெறலாகும்.''

21. ஆக இவ்வளவு நிரூபணங்களும் வேதாந்தவாரியருடையஉண்மையான திருவுள்ளத்தை விளக்கத் தோன்றியவைகளே

யொழிய வேறென்றுக்காக வன்று. பொதுவாகவே சாஸ்த்ரங்களும் பூருவர்களின் ஸ்ரீஸூக்திகளும் பெரும்பான்மை எம்பெருமானுடைய ப்ரபாவங்களைப் பரக்கப் பேசுவதற்கும், சிறுபான்மை எம்பெருமானுடைய பெருமையையும் குறைத்து ஆசார்யனுடைய பெருமையை விஸ்தரித்துப் பேசுவதற்கும் தோன்றியவை. ஆங்காங்கு அக்ஷரலப்யமான அர்த்தங்களை உள்ளபடி கொள்ள வேண்டுமே யொழிய அவற்றில் வ்யர்த்ததூஷணங்களைச் செய்யத்தகாது. பிறர் தாங்கள் ஸங்கேதமாத்ர ஸித்தங்களாகச் சில அர்த்தங்களை ஏற்பாடு செய்து கொண்டு அவற்றுக்கு விருத்தமாய் விடுகிறதோ வென்கிற பயத்தினால் ஸுஸ்பஷ்டார்த்தங்களான ஸூக்திகளுக்கும் அபார்த்தங்களை ஏறிடப்பார்க்கிறார்கள். ஏறிடுகிற அசட்டு அர்த்தம் நிலைநிற்கமாட்டாதாகையாலே சரிந்து விழும்படியாகிறது அண்ணங்கராரியருடைய அத்புத நிரூபணங்களினால். ப்ரபத்தி உபாயம், பிராட்டி உபாயம் என்பதாகச் சில விஷயங்கள் விவாதாஸ்பதங்களாயிருந்துவருகின்றன. ஆசாரியர்களுடைய க்ரந்தங்களை நன்கு பராமர்சியாமல்தானே வாத கோலாஹலங்கள் வளர்ந்து செல்லுகின்றன வென்றும், வேதாந்தவாரியருடைய ஸ்ரீஸூக்திகளை மட்டுமாவது உற்று நோக்கினாலும் இந்த வீண் விவாதங்களை வளர்க்க ப்ரஸக்தியிராதென்றும் தெரிவித்து அண்ணங்கராரியர் நிரூபித்திருக்கும் விஷயங்கள் ஸமரஸப்பான்மை பொருந்திய நிர்மத்ஸரர்களுக்குப் பரமபோக்யமானவை. அவற்றைச்சிறிது எடுத்துக்காட்டுகிறேன்.

22. ந்யாயஸித்தாஞ்ஜநே “इयं केवललक्ष्मीशोपायत्वप्रत्ययात्मिका। स्वहेतुत्वधियं रुन्धे किं पुनः सहकारिणाम् ॥” என்கிற காரிகை ஸுப்ரஸித்தம். விபுலமான க்ரந்தராசிகளால் விரித்துக்கூறிய பொருளை ஒரு காரிகையினால் ஸாரமாகச் சுருக்கிக் கூறுவது சாஸ்த்ரஜ்ஞஸரணி. இந்த ரீதியிலேயே இந்த காரிகை அமைந்திருக்கிறது. இதன் பொருள் ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களுக்கு வியாக்கியாநநிரபேக்ஷமாகவே தெரியக்கூடியது. லக்ஷ்மீபதியையே உபாயமாக அத்யவஸிப்பது தான் ப்ரபத்தியின் வேஷமென்றும் அப்படிப்பட்ட அத்யாவஸாயரூபமான ப்ரபத்தியானது தன்னிடத்தில் உபாயத்வத்தை ஸஹிக்க மாட்டாதென்றும் இந்த காரிகையில் ஸந்தேஹவிபர்யயமறச் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் ப்ரபத்திக்கும் பிராட்டிக்கும் உபாயத்வம் நிரோதிக்கப்பட்டதாயிற்று. பிராட்டியின் உபாயத்வம் எப்படி நிரோதிக்கப்பட்டதென்னில்; “इयं लक्ष्मीतदीशानोपायत्वप्रत्ययात्मिका”

என்று ச்லோகம் இயற்றலாமாயிருக்க அப்படி இயற்றுதே "केवल-लक्ष्मीशोपायत्वप्रत्ययात्मिका" என்று ச்லோகமிட்டவருடைய கருத்து வேறென்ன சொல்லமுடியும்? கேவலபதத்தின் ப்ரயோஜனமும் காணவேணும். மேலும் இந்த ஒரு காரிகையோடு இவ்விஷயம் முடிக்கப்பட்டதன்றே. மற்றும் அவருடைய ரஹஸ்யாதி க்ரந்தங்களிலிருந்தும் ஸுஸ்பஷ்டமான ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டியிருப்பவைகளையும் ஸாரமாக இங்கு உதாஹரிக்கிறேன்.

## பிராட்டியின் உபாயத்வ சோதனம்

"த்வயத்தில் பூர்வகண்டத்தில் ஒரு விசாரம். * ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே * என்கிறவிதில் லக்ஷ்மீஸமேதனான நாராயணனை உபாயமாகப் பற்றுவதாய்ச் சொல்லப்படுகிறது. இங்கு ப்ரதிபந்நமான ப்ரபதநகர்மத்வம் நாராயணனுக்கு எப்படிப்பட்டதோ அப்படிப்பட்டதாகவே பிராட்டிக்கும் உண்டா இல்லையா என்பது விசாரம். இல்லையென்பது பட்டர் தேசிகன் முதலானோருடைய ஸித்தாந்தம். உண்டு என்பது நவீனர்களின் கொள்கை. முதலில் பட்டருடைய திருவுள்ளத்தை விவரிப்போம். அவர் ஸாதித்தருளின அஷ்டச்லோகியில் த்வயார்த்த விவரணச்லோகங்களில்,

> "ஈசாநாம் ஜகதாம்அதீசதயிதாம் நித்யாநபாயாம் ச்ரியம்
> ஸம்ச்ரித்ய, ஆச்ரயணோசிதாகில குணஸ்யாங்க்ரீ ஹரேராச்ரயே,
> இஷ்டோபாயதயா, ச்ரியா ச ஸஹிதாயாத்மேச்வராயார்த்தயே
> கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம் நித்யம்த்வஹம் நிர்மமஃ"

என்பது ஒரு ச்லோகம். இதில் த்வயத்தின் உபயகண்டார்த்தங்களும் ஸாரமாக நிரூபிக்கப்பட்டுள்ளன. (இஷ்டோபாயதயா) என்கிற வரையில் பூர்வ கண்டார்த்தம். அதில் (ச்ரியம் ஸம்ச்ரித்ய) என்று முற்பட வொரு ஆச்ரயணத்தை ஸாதித்து முடித்துவிட்டு, பிறகு "ஹரேஃ அங்க்ரீ இஷ்டோபாயதயா ஆச்ரயே" என்று தனிப்பட பகவத்ப்ரபதநம் ப்ரதிபாதிதமா யிருக்கிறபடியை நோக்கவேணும். இங்கே அஸ்மத்குல கூடஸ்தாசார்யருடைய வியாக்கியான ஸ்ரீஸூக்திகளிவை:—"பகவத் ப்ரதாந மஹிஷீம் ச்ரியம் மாத்ருத்வப்ரயுக்த வாத்ஸல்யாதிரேகாத் அவ்யவதாநேந புருஷகாரதயா சரணம் ப்ரபத்ய—இத்யர்த்தஃ" என்றும், மேலே உத்தரகண்டார்த்த விவரணத்தில் (ச்ரியாச ஸஹிதாய) என்னுமிடத்து "சரணவரண காலே புருஷகாரபூதயா லக்ஷ்ம்யாச ஸம்ச்லிஷ்டாய" என்றுமுள்ளன. இந்த வியாக்கியான வாக்யங்கள் இருக்கவுமாம், இல்லையாகவுமாம்; பட்டருடைய மூல ஸ்ரீஸூக்தியே பர்யாப்தம். உத்தரகண்ட ப்ரமேயமான கைங்கரிய ப்ரார்த்தனையில் திவ்ய தம்பதிகளிருவர்க்கும் தாரதம்யமற்ற ப்ரதிஸம்பந்தித்வத்தை "ச்ரியாச ஸஹிதாய ஆத்மேச்வராயார்த்தயே கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம்" என்றருளிச் செய்தவர் தாமே பூர்வகண்ட ப்ரமேயமான சரணவரணத்தில் அந்த திவ்ய தம்பதிகளிருவர்க்கும் அங்ஙனே துல்யமான ப்ரதிஸம்பந்தித்வத்தை யருளிச்செய்யாமல் வாக்யபேதம் செய்தருளியிருக்கின்றவாற்றை நோக்குங்கால் பட்டருடைய ஸித்தாந்தம் எளிதாகப் புலனாகுமன்றோ. ஸ்வாமி தேசிகன் பட்டருடைய ஸ்ரீஸூக்திகளையே நிதியாகக் கொண்டு பலவிடங்களிலும் தத்வநிர்த்தாரணம் செய்தருளக் காணாநின்றோம். பட்டர் ஸ்ரீஸூக்தியோ எவ்விதமான ஸந்தேஹத்திற்கும் விவாதத்திற்கும் இடமின்றியே யுள்ளது. இஷ்டோபாயதயா என்பது * ச்ரியம் ஸம்ச்ரித்ய * என்ற விடத்தில் ஒருபடியாலும் இணங்கக்கூடாதென்

கிற வலிதான திருவுள்ளத்தோடே அதை உத்தரார்த்தத்திலே கொண்டுபோய் விநியவித்துள்ளார்.''

"ஸ்ரீதேசிகன் ரஹஸ்யரத்நாவளியிலே "ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வஜீவர்களுக்கும் தஞ்சம்.........ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்" என்றருளிச் செய்தருளி இதன் பொருளை ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதயத்திலே அழகாக விவரித்தருளினார். ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸாரத்திலும் பரிபூர்ண ப்ரஹ்மாநுபவாதிகாரத்தில் "ஈச்வரனுக்குச் சத்ரசாமராதிகளைப் போலே லக்ஷணமாகச் சொன்ன ஜகத்காரணத்வ மோக்ஷப்ரதத்வ ஸர்வாதாரத்வ ஸர்வ நியந்த்ருத்வ ஸர்வசேஷித்வ ஸர்வ சரீரித்வ ஸர்வ சப்தவாச்யத்வ ஸர்வ வேத வேத்யத்வ ஸர்வலோக சரண்யத்வ ஸர்வமுமுக்ஷு உபாஸ்யத்வ ஸர்வபல ப்ரதத்வ ஸர்வ வ்யாப்தஜ்ஞாநாநந்த ஸ்வரூபத்வ லக்ஷ்மீஸஹாயத்வாதிகள் ப்ரதிநியதங்கள்." என்றருளிச் செய்யப்பட்டது. இங்கு, லக்ஷ்மீ ஸஹாயத்வத்தை முடிவாகச் சொல்லிவைத்தது வெகு அற்புதமானது. பிராட்டிக்கு லக்ஷ்மீஸஹாயத்வம் எப்படி ஸம்பவியாதோ அப்படியே முன்சொன்ன மோக்ஷப்ரதத்வாதிகளும் ஸம்பவியாதென்று விளக்கினபடி.

ந்யாயஸித்தாஞ்ஜநத்திலும் ஜீவ பரிச்சேதத்தில் "ஸ்ருஷ்ட்யாதி ஜகத்வ்யாபார மோக்ஷப்ரதத்வ முமுக்ஷு உபாஸ்யத்வ ஸர்வ சேக்ஷித்வாதி ரூப பகவதஸாதாரண தர்ம..." இத்யாதியால் இவ்வர்த்தமே சொல்லப்பட்டது. அவ்விடத்திற்கு வியாக்கியானம் பண்ணினவர்களும்,

"ஜகத்வ்யாபார மோக்ஷப்ரதத்வாதே: முக்தஸாதாரண்யே தேஷாம்
வேதாந்தேஷு ப்ரஹ்மலக்ஷணத்வேந உபதேசோ ந ஸ்யாதிதி பாவ:"

என்றுரைத்தனர்.

ஆக இவ்வளவு ப்ரமாணபுஞ்ஜங்களாலே உபாயத்வம் நாராயணனுக்கே உரியதென்று ஸம்சயவிபர்யயமற விளங்கா நிற்கும்போது த்வயத்தின் பூர்வகண்டத்திலுள்ள மதுப்பானது பிராட்டிக்கு உபாயத்வப்ரதிபாதகமாக ஸம்பாவனையில்லை. ஆனபின்பு "சப்தஸ்வரஸத: ப்ராப்தம் வைசிஷ்ட்யம் ப்ரதமச்ருதம், விசேஷ்ய சரணத்வித்வம் நஹி பாதிதுமர்ஹதி" என்று கூற ப்ரஸக்திலேசமுமில்லை. இதனை விரிவாக விளக்குவோம். வைசிஷ்ட்யம் சப்தஸ்வரஸத: ப்ராப்தமென்பதை அப்படியே இசைந்திடுவோம். அதை த்விவசநாந்த சரணசப்தத்தாலே பாதிப்பார் யாருமில்லையே. அப்ரஸக்த ப்ரதிஷேதம் எதுக்கு? சப்தஸ்வரஸத: ப்ராப்தமான வைசிஷ்ட்யமாவது என்ன? என்பதை முந்துற ஆராய வேண்டும். ஆராய்ந்தால் நவீநர்களின் இந்த விசாரமே முற்றிலும் அஸ்தானே என்பது எளிதிற் புலனாம்.

த்வயார்த்த நிர்வாஹபரமாக ஸ்வாமி தேசிகன் எழுதியுள்ள எந்த இடத்தையெடுத்து ஆராய்ந்தாலும் நன்றே. இங்குச் சிலவிடங்களையெடுத்துக் காட்டுகிறோம்; கத்ய பாஷ்யத்தின் உபக்ரமத்தில்—

"कृत्स्नमिदं गद्यं द्वयविवरणमिति साधीयान् संप्रदायः। इह च भगवत्प्रपदने समुद्यतस्य सम्यग्ज्ञानसंपादनपुरुषकारपुरस्कारादिकं पूर्वकृत्यम्; साङ्गस्वरक्षाभरसमर्पणं तत्कालकृत्यम्;

स्वनिष्ठानुसन्धानपूर्वकं स्वाधिकारोचितकैङ्कर्यादिकमुत्तरकृत्यम्; शरण्यस्य तु पूर्वकृत्यं पुरुषकारप्ररोचनादिकम्, तत्कालकृत्यम् समर्पितसर्वभरस्वीकरणम्; उत्तरकृत्यं तु मुक्तिप्रदानपर्यन्तम् ॥ ” என்றுள்ளது.

இதில் ஸமர்ப்பிதபரஸ்வீகரணம் சரண்யனுடைய க்ருத்யமென்றதே யொழிய தம்பதிகளின் க்ருத்யமென்று சொல்லிற்றில்லை. இதனால் முன்வாக்யத்தில் “ ஸாங்கஸ்வரக்ஷாபரஸமர்ப்பணம் தத்கால க்ருத்யம் என்றதும் புருஷகாரோத்தேஜிதகருணகனான நாராயணனிடத்திலே யென்பதும் தெற்றென விளங்கிற்று. மேலே * ச்ரியம் தேவீம் * என்ற விடத்தில் ஸ்ரீசப்தார்த்த நிருக்திகளை நிரூபித்தருளினபின்—“ ஸ்ரீபதநிருக்திபிஃ ஸம்ச்ரித தோஷநிராகரணம் ப்ராப்யருசிப்ராபகாத்யவஸாயாதிப்ரதாநம் உபாயஸ்வரூப நிர்வர்த்தகத்வம் பதிப்ரஸாத ஜநகத்வஞ்ச ஸித்தம் ” என்றார். ஸ்ரீசப்தத்திற்குள்ள ஆறுவகை வ்யுத்பத்திகளில் ஸ்ரீயதே என்பதும் ஒன்று. ஆச்ரயண கர்மத்வம் நாராயணனுக்குப் போலே பிராட்டிக்கும் ப்ரமாணஸித்தமாகவுள்ளது. பிராட்டிக்குச் சொல்லப்படுகிற இந்த ஆச்ரயணகர்மத்வத்தை ஸ்வாமி தேசிகன் ஒவ்வோரிடத்திலும் எங்ஙனே நிர்வஹித்தருளுகிறாரென்பதொன்றையே நிபுணர்கள் நோக்கவேணும்.

ஸ்ரீக்கு உபாயத்வமில்லை யென்றும், சரணம் ப்ரபத்யே என்ற க்ரியையில் அவளுக்கு அந்வயமில்லையென்றும் ஸாதிக்கிறவர்கள் தாமும் ச்ரியம் ப்ரபத்யே என்றும் ஸ்ரீசரணௌ சரணம் ப்ரபத்யே என்றும் அநுஸந்தியாமலில்லை. * லக்ஷ்ம்யாஃ பதாம்புஜயுகம் சரணம் ப்ரபத்யே * என்று நூறாயிரம் கவிகள் பணித்தே வருகிறார்கள். கத்யத்தில் * பகவந்நாராயணாபிமத...என்று தொடங்கி * அசரண்ய சரண்யாம் அநந்ய சரணச் சரணமஹம் ப்ரபத்யே * என்றதை நிஸ்ஸங்கோசமாக நித்யாநுஸந்தானம் செய்து போருவதையும் காணாநின்றோம். அப்படிப்பட்டவர்கள் த்வயத்திலுள்ள “ சரணம் ப்ரபத்யே ” என்ற க்ரியையில் மாத்திரம் பிராட்டிக்கு அந்வயம் கிடையாதென்று கூறினால் அவர்களின் திருவுள்ளம் யாதென்று ஆராய வேண்டாவோ? அபிஸந்திமருமமறிய வேண்டாவோ? ஒருவர் ஆசார்யனையும் விட்டு ஆசார்யன் திருவடிகளையும் விட்டு ஆசாரியன் திருமாளிகையையே பரமோத்தேச்யமாகக் கொண்டு அந்தத் திருமாளிகை விஷயமாக ஒரு ஸஹஸ்ரம் பணிக்கிறார். நம்மாழ்வார் அழகரை விட்டு அழகர் திருமலையையும் விட்டு அந்தத் திருமாலிருஞ்சோலைமலைக்கு அருகேயுள்ள ஒரு குன்றைத் தஞ்சமாகப் பற்றுங்களென்கிறார்— * மயல்மிகு பொழில்சூழ் மாலிருஞ்சோலை அயன்மலையடைவது அது கருமமே.* என்று. இதில் யார்க்கும் விப்ரதிபத்தியில்லை. இவ்வண்ணமாகவே த்வயத்தில் ‘ சரணௌ சரணம் ப்ரபத்யே ’ என்றதில் பிராட்டிக்கும் அந்வயமிருந்தால் என்ன ஹாநி வரும்? இதை மஹாப்ராஜ்ஞர்களான ஆசார்யர்கள் மறுக்கிறார்களென்றால் இதில் நுட்பமறிவதன்றோ நுண்ணறிவாளரின் கடமை. கேண்மின்: எம்பெருமானுக்குச் சொல்லுகிற சரணவரணகர்மீபாவம் அநந்ய ஸாமான்யம். அதில் கூறுகொள்ள யார்க்கும் உரிமையில்லை. இதனை ஸ்ரீதேசிக திவ்ய ஸூக்திகளே நிலைநாட்டும். பிராட்டிக்கு உபாயத்வாவச்சேதகத்வமொழிய உபாயத்வமில்லை என்கிற ஸித்தாந்தத்திலே ஸகலாசார்யர்களும் ஸமகண்டர்களே. “ உபாயத்வாம்சத்திலே பிராட்டிக்கும் பெருமாளுக்கும் ஸாம்யம் ப்ரதிபந்நமாகுமிடங்களில் * ச்ரியஃஸ்ரீஃ ஸ்ரீரங்கேசய! தவச ஹ்ருத்யாம் பகவதீம் ச்ரியம் த்வந்தோபி உச்சைர்வய மிஹ பணமஃ ச்ருணுதராம் * என்கிற பட்டர் ஸ்ரீஸூக்திக் கட்டளையிலே நிர்வாஹம் ” என்று முன்னோர் மொழிந்த முறை. அதாவது—எம்பெருமானைக் கீழ்ப்படுத்திப் பிராட்டியை மேற்படுத்திப் பேசுவதற்குள்ள தாத்பர்யமே ஸமநிலையில் வைத்துப் பேசுவதற்குமொக்கும் என்றவாறு. “ ஆசாரியர்களும் பாகவதர்களும் பகவானிலும் மேற்பட்டவர்

கள்" என்று சொல்லுமவற்றுக்கு வேதாந்திகள் நிர்வஹிக்கும் கட்டளை மறக்கற்பாலதன்று."

"மற்றவை இடக்க; பிராட்டிக்கு ஆங்காங்கு ப்ரதிபக்ஷமாகிற சரணவரணகர்மீபாவத்திற்கு எவ்வளவில் நோக்கென்று விமர்சிக்கில் 'எம்பெருமானுக்கு நாங்கள் ஆளாகும்படி நோக்கியருளவேணும் தாயே!' என்னுங் கோரிக்கையளவிலேதானென்று புலப்பட்டேதிரும். மோக்ஷரூபமான பலனை பிராட்டி தானே நேரே தந்தருளுகிறாளென்று எங்கேனும் சொல்லி யிருந்தாலுங்கூட தாயபிதாக்களையும் தாதாக்களாகவே வைத்துப் புகழ்கிற கட்டளையிலே பொருந்தக் குறையில்லை. *ஞானக்கனிந்த நலங்கொண்டு* என்கிற நாற்றத்தாழிப்பாசுரத்தில் எம்பெருமானைப் போலே எம்பெருமாளும் மோக்ஷப்ரதையென்று சொல்லி யிருப்பதோடு எம்பெருமானுடைய மோக்ஷப்ரதத்வமே மிகச் சிறியதென்றும் வ்யக்தமாகச் சொல்லியுள்ளது. இதை எப்படி நிர்வஹிக்கிறோமென்பது சொல்லவேணுமோ? அதுவே கட்டளைதான் பிராட்டி திறத்தும்."

"*வேரிமாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே* என்கிற பாசுரம் பிராட்டியின் உபாயத்வத்தைச் சொல்லுகிறது என்பாரோடு நமக்கு யாதொரு பிணக்குமில்லை. *ஆயிரத்துளிப்பத்தும் அருவினை நீறு செய்யுமே* இவை பத்தும் வீடு செய்யும் இனர்வார்க்கே* இப்பத்தும் வானின்மீதேற்றி யருள்செய்து* இப்பத்தும் மேலை வைகுந்தத்திருத்தும்* என்றிப்படியுள்ள பாசுரங்களையும் நோக்கலாமே. *வேரிமாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே* என்றதைக் காட்டிலும் ஸுஸ்பஷ்டமாக ஒருபத்துப் பாசுரத்திற்கே மோக்ஷப்ரதத்வம் சொல்லப்பட்டிருக்கிறதே. அது பகவத்ப்ரஸாதநத்வாரா என்றுகொண்டு ஸத்வாரகஸாதநத்வத்தை அங்கு நிர்வஹிக்கிற கணக்கிலே இங்கும் குறை இல்லையே. ஆகவே ப்ரஸாதயித்ருத்வம் தவிர வேறொன்றும் பிராட்டி பக்கல் புகாது."

"ஸாரஸார ரஹஸ்ய த்வயாதிகாரத்தில்—"உபாயதசையிலும் உபேயதசையிலும் நாராயணன் கோலமலர்ப்பாவையோடு பிரிவற்றபடியைப் பூர்வோத்தர கண்டங்களில் மதுப்பு காட்டுகிறது" என்றருளினர் தேசிகன். இதில் யாதொரு விப்ரதிபத்தியுமில்லை. "ஆச்ரயணதசையோடு போகதசையோடு வாசியற ஒரு மிதுநமேயிறே உத்தேச்யம்" என்று ஈட்டிலுமுள்ளது. உபாயோபேயதசைகளிரண்டிலும் பிராட்டிக்குப் பிரிவு இல்லை—என்றதன் தாத்பரியத்தை அந்த இடத்திலேயே தேசிகனே விவரித்தருளுகிறார்—"இந்த மதுப்பு அநேகார்த்தகமேயாகிலும் ஸம்ஸாரிகளுக்கு நினைத்தபோதே நிச்சங்கமாக ச்ரிய:பதியினுடைய திருவடிகளைப் பற்றலாம்படியான உபயோகாதிசயத்தாலே இங்கே நித்யயோகத்தைச் சொல்லுகிறது." என்று ஸ்பஷ்டமாகவே ஸாதித்துள்ளார். எம்பெருமான் திருவடிகளில் சேதநர்களை நிச்சங்கமாகப் பற்றச் செய்வதாகிற புருஷகாரத்வத்திலே பிராட்டிக்கு உபயோகம் காட்டவே இந்த மதுப்பு உள்ளதென்று காட்டினாராயிற்று. இதுதானே ஸகலாசார்ய ஸூக்தி ஸர்வஸ்வம். ஸ்ரீவசநபூஷணத்தில் ப்ரபத்தியினுடைய தேசகால நியமராஹித்ய மருளிச் செய்யுமிடத்து "இவ்வர்த்தம் மந்த்ர ரத்நத்தில் ப்ரதம பதத்திலே ஸுஸ்பஷ்டம்" என்றதற்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானம்—(த்வயத்தில்) ப்ரதம பதத்திலே மதுபர்த்தமான புருஷகாரோபாய நித்ய யோகத்துக்கு ப்ரயோஜநம் - ஏதேனுமொரு தேசத்திலே ஏதேனுமொரு காலத்திலே ஒரு ஸம்ஸாரி சேதநனுக்கு பகவத் ஸமாச்ரயணருசி விளைந்தால்... க்ஷணபங்குரையான ருசிதிருவதற்கு முன்னே தத்தத்க்ஷணத்திலேயே ஆச்ரயிக்கலா யிருக்கையிறே." என்று. ஆகவே பிராட்டியின் நித்ய யோகத்தை ஒருவரும் மறைத்திலர். *நேத்ருத்வம் நித்யயோகம்* என்றே அஷ்டச்லோகியும்."

ஸம்ப்ரதாயார்த்த விவாதங்களில் இது வொரு பெரிய விஷயமாக க்ரந்த சர்ச்சைகளில் வளர்ந்திருப்பதால் இது அவ்வளவு தானே அகாண்டே வளர்ந்த விஷயமென்றும், வேதாந்தவாரியருடைய நிஜமான அபிப்ராயத்தை யறிந்து கொள்ளாமல் சிலர் வளர்த்த விவாதமென்றும் அண்ணா ஸ்வாமி யொருவரே கண்டறிந்து தெளிவுபெறுத்தினவராதலால் இவ்விஷயத்தில் அடியேன் இவ்வளவு விரிவாக அவருடைய க்ரந்த ஸந்தர்ப்பங்களை யெடுத்துக் காட்ட நேர்ந்தது. அவருடைய ஸூக்திஸாகரத்தில் இவை ஒரு திவலை.

23. காஞ்சீபுரியில்வித்வானும் ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராயும் ஒரு தாதாசார்ய வத்ஸஸ்தர் இருந்தார். அவர் ஒரு ஸமயம் கூரத்தாழ்வான் திருநக்ஷத்திரோத்ஸவம் ஸேவிக்க கூரம் சென்றிருந்தார். அங்கே பல ப்ரகரணங்களில் அநுஸந்திக்கிற தனியன் ஒன்றுண்டு; அதாவது, “अर्वाञ्चो यत्पदसरसिजद्वंद्वमाश्रित्य पूर्वे मूर्ध्ना यस्यान्वयमुपगता देशिका मुक्तिमापुः। सोऽयं रामानुजमुनिरपि स्वीयमुक्तिं करस्थां यत्संबन्धादमनुत कथं वर्ण्यते कूरनाथः ॥” என்பது. இது பட்டர் அருளிச்செய்ததாக ஸுப்ரஸித்தம். இதில், எம்பெருமானாருடைய திருமுடிஸம்பந்தத்தினால் முற்பட்ட ஆசாரியர்கள் உஜ்ஜீவித்ததாகவும் பிற்பட்ட ஆசார்யர்கள் அவருடைய திருவடிஸம்பந்தத்தினால் உஜ்ஜீவித்துக்கொண்டிருப்பதாகவும் கூறப்பட்டிருக்கிறது. இதைக் கேட்ட அந்த தாதாசாரியர் “இதெல்லாம் தப்பான ஐதிஹ்யத்தைக் கொண்டு கல்பிக்கப்படுகிற ச்லோகம்; பிற்பட்டவர்களுக்கு ஸ்வாமியின் திருவடிஸம்பந்தத்தினால் மோக்ஷமென்றால் இது பொருந்தும்; முற்பட்டவர்களுக்குத் திருமுடிஸம்பந்தத்தினால் மோக்ஷமுண்டாயிற்றென்றால் இது அநந்விதமான வார்த்தையல்லவா? இது எப்படி பொருந்தும்? ஸ்ரீமந்நாதமுனிகள் உய்யக்கொண்டார் மணக்கால்நம்பி போல்வார் தானே ஸ்வாமிக்கு முற்பட்டவர்கள்; அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச்சேர்ந்தவர்களன்றோ; அவர்களது காலத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் அவதரித்திருந்தாலன்றோ இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்ல இடமுண்டு. இவருடைய அவதாரமே நடந்திலாதஸமயத்தில் இவருடைய திருமுடிஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமான வார்த்தை” என்று உபந்யஸித்து அங்குள்ள யதாச்ருதக்ராஹிகளான ஸ்ரீவைஷ்ணவர்களின்

மனத்தை அதிமாத்ரம் குழப்பிவிட்டார். இச்செய்தி நம் அண்ணங்கராரியருக்குத் தெரியவந்து உடனே அன்றிரவு மஹோத்ஸவத்திற்கு அங்கே சென்று அந்த தாதாசார்யவித்வானுக்கு வெகு ஆச்சரியமாகத் தத்துவமுணர்த்தினர். அதைச் சிறிது விவரிக்கிறேன்;—

வேதாந்தவாரியர் ந்யாய பரிசுத்தியின் தொடக்கத்தில் எம்பெருமானரைப்பற்றிப் பணித்த மங்கல ச்லோகத்தில்—“ पत्युस्संयमिनां प्रणम्य चरणौ तत्पादकोटीरयोः संबन्धेन समिध्यमानविभवान् धन्यांस्तथाऽन्यान् गुरून् ” என்றுள்ளது. இதன் பொருளாவது, **ஸம்யமிநாம் பத்யு:**— எதிராசரான எம்பெருமானருடைய, **சரணௌ**— திருவடிகளை, **ப்ரணம்ய**— வணங்கியும்; **தத்பாதகோடீரயோ: ஸம்பந்தேந**— அந்த எம்பெருமானருடைய திருவடியென்ன திருமுடியென்ன இவற்றினுடைய ஸம்பந்தத்தினல், **ஸமித்யமாநவிபவாந்**— பெருமைபெற்றவர்களாய், **தந்யாந்**— க்ருதார்த்தர்களான, **குரூந் ப்ரணம்ய**— ஆசாரியர்களை வணங்கியும்......ந்யாயபரிசுத்தி யென்கிற இந்தக்ரந்தம் செய்யப்படுகிறது என்கை. இதில் “**தத் பாதகோடீரயோஸ் ஸம்பந்தேந**” என்றது உயிரான வார்த்தை. கோடீரமென்று திருமுடிக்குப் பெயர். பிற்பட்டவர்களுக்குத் திருவடிஸம்பந்தம் போல முற்பட்டவர்களுக்குத் திருமுடிஸம்பந்தம் உத்தாரகமென்று இதனல் நன்கு காட்டப்பட்டதாயிற்று. இந்த ச்லோகமானது “**அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜ த்வந்த்வமாச்ரித்ய**” என்கிற ஆழ்வான் தனியனையடியொற்றியே வேதாந்தவாரியர் பணித்தது. * यश्चोभयोस्समो दोषः परिहारोऽपि वा समः * இத்யாதி. என்று பாக்கவுபந்யஸித்தார் அண்ணங்கராரியர். அவர் இவை முழுவதும் கேட்டு இதற்குமேல் ஒன்றும் வாய்திறக்க வழியில்லாமையாலே ‘இப்படியன்ரே விஷயஞ் சொல்லவேணும்’ என்று கொண்டாடிவிட்டு அப்போது ஸாரமாகவும் ரஸமாகவும் சில வார்த்தை சொன்னர்; “ஒரு க்ஷணத்தில் தேசிகனுடைய ஸ்ரீஸூக்தியைக் கொண்டே என்னை வாய்மாளப்பண்ணின ஏற்றம் இந்த ஸ்வாமி யொருவர்க்குத்தான் ஏற்கும். மற்றபேர்கள் ஏதாவது கதை சொல்லிக் கொண்டிருப்பர்களே யொழிய இப்படி ச்ருங்கக்ராஹிகயா ப்ரமாணமெடுத்துக்காட்ட, அதிலும் தேசிக ஸூக்தியையே யெடுத்துக்காட்ட சக்தரல்லர். எங்களுடையவர்கள் எதையும் ஆழ்ந்து பாராமல் “ वितथैर्विद्यसहस्रवर्णनेन ” என்று உபாலம்பம்

செய்து போனார்கள். வாயெடுத்ததற்கெல்லாம் பின்புள்ளார் அதையே சொல்லி வருகிறார்கள். நானும் தப்பான ஐதிஹ்ய மென்றே கருதிப் பல பேசிவிட்டேன், அடியேனை க்ஷமித்தருள வேணும்" என்று.

24. அப்போது அண்ணங்கராரியர் மேலே காட்டின ந்யாய பரிசுத்தி ஸூக்திக்கு அநுபந்தமாகவே பலவிஷயங்களை உபந்ய ஸித்தார். அவையெல்லாம் க்ரந்தங்களில் ஏறியேயிருக்கின்றன. சிலவற்றை யிங்கெடுத்துக் காட்டுகிறேன். சாஸ்த்ரங்களில் உத்தம புருஷர்களின் ப்ரபாவங்களைச் சொல்லுமிடத்து "दश पूर्वान् दशापरान् ....पुनाति" என்றும் "सप्त सप्त च सप्त च" என்றும் சொல்லப்பட்டிருப் பது ப்ரஸித்தம். "परिवर्तिनि संसारे मृतः को वा न जायते। स जातो येन जातेन याति वंशः समुन्नतिम्॥" என்ற கணக்கிலே ஒரு வம்சத்தில் ஒரு மஹநீய புருஷன் தோன்றினால் அவரது பெருமேன்மையினால் முன்னே பலதலைமுறையாரும் பின்னே பலதலைமுறையாரும் வாழ்ச்சி பெறு வதாகச் சொல்லப்படுகிறது. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் * செடியார் நோய்களெல்லாம் துறந்து எமர் கீழ்மேலெழுபிறப் பும் விடியா வெந்நரகத்து என்றுஞ் சேர்தல் மாறினரே * என்றும் * கேசவன்தமர் கீழ் மேலெமரேழெழு பிறப்பும் மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா * என்று மருளிச் செய்தார். இவற்றால், முற்பட்டவர்களையும் ஸத்கதிபெறுவிக்கும் பெருமை பிற் பட்டவர்களுக்கு [மஹாகுலதிலகபூதர்களான சில விசிஷ்டவ்யக்தி களுக்கு] விளைகின்றதென்பது சாஸ்த்ரஸம்மதமான விஷயம். முற்பட்டவர்களை ஸத்கதி பெறுவிப்பதென்னும் விஷயம் நிற்க. பிற்பட்டவர்களுக்கு ஸ்வஸம்பந்தத்தினால் ஸத்கதி பெறுவிக்கும் பெருமை ஸ்வாமி எம்பெருமானார்க்கு அஸாதாரண மென்பது நிர்விவாதமான விஷயம். இப்பெருமை ஸ்வாமிக்கு ஸ்ரீரங்கநாத னுடைய வரப்ரஸாதமடியாகவும் கிடைத்ததென்பது வேதாந்த வாரியராலேயே ஸ்பஷ்டமாக விளக்கப்பட்டிருக்கின்றது. ந்யாஸ திலகத்தில் "श्रुत्वा वरं तदनुबन्धमदावलिप्ते" என்ற ஸூக்தியானது ஒருவ ராலும் கண்ணழிக்க முடியாமல் விளங்குகின்றது. இதில் ஒவ் வொரு பதமும் உயிரானது. ச்ருத்வா என்பது முதற்பதம். இவ்விஷயம் கர்ணபரம்பரையினால் தமக்கு எட்டியதாகக் காட்டின படி. வரம் என்பது இரண்டாவது பதம். வேதத்தில் वरं वृणी

என்றும் वरं वृणामहै என்றும் பலபலவிடங்களில் வருகிறது. அவ்வா வர்கள் தாமே ஏதோ வரம் கேட்டுப்பெற்றதாக இதிஹாஸம் வருகிறது. वरं वृणीष्व என்று வரத்தை வேண்டிக்கொள்ளும்படியாகச் சொல்லி பிறகு வேண்டிக்கொண்ட வரத்தைக் கொடுத்ததாகவும் வேதங்களில் பல பல உபாக்கியானங்களுள்ளன. இங்கு அப்படியன்றிக்கே ஸ்ரீரங்கநாதன்தானே ஸ்வாமிக்கு ஒரு வரம் கொடுத்தருளினதாகச் சொல்லப்படுகிறது. வரப்ரஸாதமென்று சொல்லிவிட்டால் அதில் ஒருவரும் ஒருவிதமான ஆக்ஷேபமும் செய்யக்கூடாது, செய்யமாட்டார்கள்—என்பது ஸப்ரதிபந்நம். அப்படியே இங்கும் ஒருவரும் ஒருவகையான ஆக்ஷேபமும் செய்யக்கூடாதென்று காட்டவே "ச்ருத்வா **வரம்**" என்கிருர். இந்த வரம் எப்படிப்பட்டதென்னில் அதை நமக்கு வியாக்கியானங்கள் விளக்கித் தருகின்றன. திருக்குமாரரான நயிஞராசார்யரும் கௌசிகஸ்ரீபாஷ்ய ஸ்ரீநிவாஸாசார்யருமாகிய இருவர் ந்யாஸதிலகத்திற்கு வடமொழியில் வியாக்கியான மியற்றியுள்ளார்கள். இதை ஐம்பது வருஷங்களுக்கு முன்பு திருக்குடந்தையில் தேசிகஸம்ப்ரதாய விவர்த்திநீஸபையார் அச்சிட்டு வெளியிட்டிருக்கிருர்கள்; அதில் நயிஞராசார்யருடைய வியாக்கியானத்தில்—

"न केवलमस्मदाचार्याभिमानमात्रेण दृप्यामः; अपितु परमगुरोर्भगवद्रामानुजाचार्यस्य भ(ग)वता दत्तं वरमपि श्रुत्वा तत्संबन्धादपि" என்றுள்ளது. அதற்கடுத்த வியாக்கியானத்தில்— "वरदानं कीदृशमिति चेदित्थम्; भो यतीन्द्र! त्वया वेदान्तशास्त्रार्थप्रतिष्ठापनाद्धेतोः माम् अविकलं प्रपन्नस्य तव अभिमाने सिद्धान्ते च साक्षात् परम्परया वा येये अन्तर्भूताः ते सर्वेऽपि देहावसान एव त्वत्सम्बन्धिसंबन्धात् मोक्षं यान्त्विति आप्तपरम्पराश्रावितम्" என்றுள்ளது. இதை நவீநர்கள் தங்களுடைய ஆசாரணக்கு விரோதமானதென்று நினைத்து இதில் பலவகையான குசோத்யங்கள் செய்கிருர்கள். ஒன்றும் ஈஷத்தும் விலை செல்லாது. இதற்கு வியாக்கியானமே வேண்டா. வரம் எப்படிப்பட்டதென்பதை ந்யாஸதிலகவக்தாவானவர்தாமே மூலத்திலேயே ஸ்பஷ்டமாகக் காட்டியிருக்கிருர். "**த்தநுபந்த மதாவலிப்தே**" என்று சொல்லியிருக்கையாலே எம்பெருமாஞருடைய அநுபந்திகளுக்கும் மோக்ஷமுண்டென்பது வரசரீரத்தில் அடங்கியிருப்பதாக நன்கு புலஞகின்றதன்ருே. இல்லையேல் இங்கு **வரம் ச்ருத்வா**

என்றவுடனே **ததநுபந்தமதாவலிப்தே** என்றது பொருளற்ற தாகுமே. எம்பெருமானாருடைய அநுபந்தங்கொண்டு தாம் செருக் கடைந்திருப்பதாகவன்றோ சொல்லுகிறார். ச்ருதமான வரத்திற்கும் இதற்கும் ஸம்பந்தமில்லையாகில் இது ஜரத்கவாதி வாக்யார்த்தம் போலாகுமத்தனை யன்றோ.

அன்றியும் * **அஸ்து தே; தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே** * என்ற சரணாகதிகத்ய ஸ்ரீஸூக்தியின் ச்ருதப்ரகாசிகையில் " संबन्धिसंबन्धिनिस्तरणमपि सर्वशब्दाभिप्रेतम् " என்றிருப்பது அழிக்கவும் மாற் றவுமொண்ணாததாதலால் அந்த ஸ்ரீஸூக்தியும் வரப்ரகாரத்தை விச தீகரித்துக் காட்டுகிறதன்றோ. " विभीषणसहागतराक्षसन्यायेन " என்று கத்யபாஷ்யத்தில் ஸாதித்திருக்கையாலே ஸாக்ஷாத்ஸம்பந்திகளுக் குத்தான் பேறு உண்டென்பது தேசிக ஹ்ருதயமாகக் காண்கிறதே யென்று சிலர் நினைக்கக்கூடும். अत्र सम्यगवधेयम्:— *चतुर्भिस्सह राक्षसैः* என்னப்பட்ட விபீஷண ஸஹாகதர்களிடத்திலே இந்த ஸஹாகமந மொன்று தவிர வேறு ஒருவகையான பற்ருசும் கண்டதில்லை. 'வ்யாஜமென்றோ உபாயமென்றோ பேரிடத் தக்கதானதொன்று எந்த வ்யக்திகளிடத்தில் இல்லையோ அந்த வ்யக்திகளுக்குங் கூடவா பேறு கிடைத்துவிடும்?' என்று சங்கிக்குமவர்களுக்குச் செவ்வனே ஸமாதானம் பெறுவிக்கைக்காகவே விபீஷணஸஹாகத ராக்ஷஸர்களை ஸ்வாமி யெடுத்துக் காட்டினார். விபீஷணாழ்வா னோடே பரம்பராஸம்பந்தம் பெற்றவர்களுக்கும் பெருமாள் பலன் அளித்திருக்கலாமாயினும் அது ப்ரமாணாரூடமாகக் காணப் பெறு மையாலும், ப்ரமாணமுகமாகத் தேறினதைக் காட்டினாலல்லது சங்காகலுஷிதர்களுக்கு சித்த ஸமாதானம் பிறவாதாகையாலும் கண்ணழிவற்ற ப்ரமாண ஸித்தமான அது தன்னையே [விபீஷண ஸஹாகத ராக்ஷஸந்யாயேந] என்று எடுத்துக்காட்ட நேர்ந்தது. எம்பெருமானை "இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹ முடைய வன்" என்கிறார்கள். அந்த க்ருபாப்ரவாஹம் பெருகப்புக்கால் 'அது இவ்வளவுதான் செல்லும், அவ்வளவு செல்லாது' என் ஞெரு நியந்த்ரணம் பண்ண வல்லாருண்டோ? 'ஒருவனுக்கு நிதி கிடைத்தது; அதிலுள்ளதெல்லாம் நவரத்னமே' என்று ஒருவர் சொன்னால் இதில் பிறர் அஸூயைப்படலாமேயல்லது 'இது எப்படி ஸம்பாவிதம்? அந்த நிதியில் பத்தெட்டுக்காசு,

இருக்கலாம்; நவரத்னங்களே நிரம்பியிருக்குமோ?" என்று சிலர் க்ஷேபிக்க இடமுண்டோ? இப்படி க்ஷேபிப்பவர்கள் பரிஹாஸ்ய ராவர்களத்தனை. ஸ்வாமி ராமாநுஜர்க்கு இப்படிப்பட்ட வரம் பெறுகையாகிற ஒப்புயர்வற்ற ப்ரபாவ முண்டாயிற்றென்றால்— இதை ப்ராமாணிகர்கள் எழுதிவைத்தால் இதை க்ஷேபிக்க அதிகாரிகள் யார்? * यतीन्द्रप्रिया विष्णुकारुण्यदूरा: * எனப் பெற்றவர்களே அதிகாரிகள்.

25. ரஹஸ்யத்ரயஸாரத்தில் அதிகாரி விபாகாதிகாரத்தில்— "**ஒரு மலையில் நின்றும் ஒரு மலையிலே தாவும் ஸிம்ஹ சரீரத்தில் ஜந்துக்களைப்போலே பாஷ்யகாரர் ஸம்ஸாரா திலங்கனம் பண்ண அவரோடுண்டான சூடல் துவக்காலே நாம் உத்தீர்ணராவுதோ மென்று முதலியாண்டானருளிச் செய்த பாசுரம்**" என்றுள்ளது. இந்த ஸிம்ஹத்ருஷ்டாந்தத்தை விமர்சிக்க வேணும். ஸிம்ஹத்தின் உடலிலே ஒரு ஜந்து இருந்தால் அது மலையைத் தாவுதற்குத் தானுகவொரு முயற்சிசெய்ய வேண்டாம். ஸிம்ஹசரீரத்தில் ஒட்டிக்கொண்டு கிடக்கைமாத்திரமே அதற்குப் போதும் என்பது இங்கே ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டுள்ளது. இதுபோல உடையவருடைய திருமேனியின் மேல் ஆண்டான் போல்வார் ஏறியிருக்கவேணு மென்பது விவக்ஷிதமன்றே. அது ஸம்பாவிதமுமன்றே. ஏதேனுமொருபடி தத்ஸம்பந்தமிருந்தால் அவ்வளவே கொண்டு ஸம்ஸாரா திலங்கனம் பண்ணிப் பேறு பெறலாமென்பதே நிஷ்கர்ஷமாகிறது. முதலியாண்டான் உடையவருடைய திருமேனி ஸம்பந்தமத்தனையே தாம் உத்தீர்ணராகைக்குப் போதும் என்றருளிச் செய்தார். அவர் உடையவரோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமுள்ளவராகையாலே அவர் சொல்லவேண்டியது அவ்வளவேயாயிற்று. ஸாக்ஷாத் ஸம்பந்தமற்றவர்களாய் மிகவும் பிற்பட்டிருக்கு மவர்களான தேசிகாதிகளுக்கும் அஸ்மதாதிகளுக்கும் பேறு தப்பாதென்று மார்பிலே கைவைத்து உறங்கப் பாங்காக "**புங்க்தேபோகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி:**" என்பதையும் "**ச்ருத்வா வரம் தததநுபந்தமதாவலிப்தே**" என்பதையும் எழுதிவைத்தாராயிற்று.

இப்படியாக இவ்விஷயத்தில் அண்ணங்காரியர் கல்லும் கரையும்படி நிரூபித்திருக்குமவை அப்ரமேயமென்னலாமே யொழிய வேறென்றும் சொல்லப்போகாது. இவையெல்லாம்

வேதாந்தவாரியருடைய ஸ்ரீஸூக்திஸரணியிலிருந்து ரேகாமாத்ரமும் பிறழாமல் பேசினவையல்லவா? இவ்வர்த்த விசேஷங்களை நவீனர்கள் ஆனந்தமாக அநுபவிக்க வேணுமேயொழிய இவற்றை க்ஷேபிக்க நினைப்பதே பிசகு. ஸ்ரீராமாயணத்தில் யுத்த காண்டத்தில் ஸமுத்ரசரணாகதிக்கு அடுத்தபடியாக ஒரு இதிஹாஸம் எழுதப்பட்டிருப்பதை வாசிக்கிறோம். பெருமாள் ஸமுத்ரராஜன் மீது சீறிச்சிவந்து தொடுத்த அம்பை அவன்மேல்விடாது அவனது வேண்டுகோளின்படி த்ருமகுல்யமென்கிற வெகுதூரஸ்தமான விடத்திலே விட்டு அங்குள்ள ஸமுத்ரராஜ சத்ருக்களையெல்லாம் ஒரே நொடியில் மாய்த்துவிட்டதாக. இதைக் காண்பவர்கள் பிரபலமான ஆக்ஷேபங்கள் செய்வதுண்டு; அவர்களை எப்படி கொல்லலாம்? 'अभियाता प्रहर्ता च' என்றிருக்குமிராகவன் அவர்களிருக்குமிடஞ்சென்று அவர்களை யுத்தத்திற் கழைத்து நேர் நின்று போர்புரிந்தல்லவோ கொல்லவேண்டும்—என்று ஆக்ஷேபிப்பவர்கள் சிலர். அந்த த்ருமகுல்யஸ்தலத்திற்காட்டில் அதிஸந்நிஹிதமான லங்கையிலுள்ள ஸ்வகீயசத்ருக்களின் மேல் அவ்வம்பைச் செலுத்தி அவர்களை வதைக்க வேண்டியது ப்ராப்தமாயும் முக்கியமாயுமிருக்க அது செய்யமாட்டாதவர் இது செய்தாரென்கை பொருந்துமோ? என்று ஆக்ஷேபிப்பவர்கள் சிலர். * न ते वागनृता काव्ये काचिदत्र भविष्यति * என்றும் * तत्सर्वं धर्मवीर्येण यथावत् संप्रपश्यति * என்றும் வரம்பெற்றவருடைய திருவாக்கில் வீணான ஆக்ஷேபங்களைச் செய்ய நாம் ஆர்! என்று நினைப்பவர்கள் மஹாபாக்யசாலிகளான பரமைகாந்திகள் சிலரேயன்றோ. இதுபோலவே, எம்பெருமானார்க்கு அநிதரஸாதாரணமாக அமைந்துள்ள பெருமையை [— * तत्पादकोटीरयोस्संबन्धेन समिध्यमानविभवान् * இத்யாதி ஸூக்திப்ரகாசிதமான ப்ரபாவத்தை] அறியகில்லாதார் செய்யுமாக்ஷேபங்களை நாம் செவியேற்கவே தகாது—என்று முடித்திருக்கிறார் அண்ணங்கராரியர்.

26. "ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளிலே அந்வயமில்லாதார்க்கு மோக்ஷம் கிடையாதென்று வேதாந்தவாரியருடைய ஸித்தாந்தம்" என்று ஒருஸமயம் ஒருபந்யாஸத்தில் அண்ணங்காரியர் மொழிந்தார். இதைக் கேட்டிருந்த ஏகதேசி ஸ்ரீவைஷ்ணவர்கள் "தேசிகன் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளின் மஹிமையைச் சில க்ரந்தங்களில்

ஸாதித்திருப்பது உண்டானாலும் திருவாய்மொழியில் அந்வயமில்லாதவர்க்கு மோக்ஷமில்லையென்று எங்கும் ஸாதிக்கக் கிடையாது" என்றார்கள். அப்போது நம் ஸ்வாமி நிரூபித்தவற்றை யெடுத்துரைக்கிறேன் கேண்மின். பாதுகாஸஹஸ்ரத்தில் ஸமாக்யாபத்ததியில் இரண்டாவது ச்லோகம்—"द्रमिडोपनिषन्निवेशशून्यानपि लक्ष्मीरमणाय रोचयिष्यन् । भुवमाविशति स्म पादुकात्मा शठकोपः स्वयमेव माननीयः ॥" என்பது. பாதுகாஸஹஸ்ரத்தில் மிகச்சிறந்த ரத்னமென்னும்படியான ச்லோகங்களுள் இது தலைமை பெற்றது. இந்தச்லோகத்தில் சொல்லுகிற அர்த்தம் ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி நம்பிள்ளையளவாகவுள்ள ஆசார்யர்கள் அருளிச்செய்து கொண்டிருந்ததே. ஆனால் அவர்கள் ச்லோக பத்தமாக்கி வைக்கவில்லை. ஸ்வாமி ச்லோகபத்தமாக்கி வைத்தார் என்பதே விசேஷம். இதன் கருத்து யாதெனில்; [த்ரமிடோபநிஷந்நிவேச சூந்யாநபி இத்யாதி.] திருவாய்மொழியில் ஏதேனு மொருபடி அந்வயமில்லாதவர்களைக் கைக்கொள்வதில்லையென்று எம்பெருமான் உறுதி கொண்டிருப்பனென்ம். ஆனால் உலகில் தமிழ்ப்பாஷை நடையாடாத நாடுகளில் பிறந்தவர்கள் எண்ணிறந்தவர்களாதலாலும் அவர்களுக்குத் திருவாய்மொழியில் அந்வயம் ஸம்பவிக்க யோக்யதை யில்லாமையாலும் அவர்களெல்லாரும் முக்தியோக்யர்களன்றிக்கே யொழிய வேண்டிவருகிறதே! இதற்கு என் செய்வது! என்று பார்த்த நம்மாழ்வார் பகவதாலயங்களில் எம்பெருமானுடைய பாதுகையிலே தாம் ஆவேசித்து [ஸ்ரீசடகோபனென்கிற பெயரைப் பாதுகைக்கு இடும்படியாகச் செய்து] வஸிஷ்டர் தொடங்கி நாபிதரஜகாதிபர்யந்தமாக வாசியின்றிக்கே யாவர்க்கும் ஸ்வாந்வயத்தையுண்டாக்கி, திருவாய்மொழியிலே ஸாக்ஷாத்தாக அந்வய மில்லாமற் போனாலும் அதற்கு வக்தாவான ஆழ்வாரோடே ஒருபடி அந்வயமுண்டாகப்பெற்ற இவர்களை நாம் கைக்கொள்ளலா மென்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றுமாறு செய்துவிட்டார்; ஆழ்வாருடைய இக்கருணை மிகவும் கொண்டாடத்தக்கது—என்பதாம். இவ்விஷயத்தை மற்றும் பல ப்ரமாணங்களோடுங் கூட விரித்துரைத்தபின்பு ஆக்ஷேபகர்கள் ஸமாஹிதர்களானார்கள்.

27. திருவாய்மொழியில் (3-5-4.) *வம்பவிழ் கோதை பொருட்டா மால் விடை யேழு மடர்த்த * என்பதொரு பாசுரம். இதில்,

நப்பின்னைப் பிராட்டிக்காக எருதேழடர்த்த சரிதை அநுஸந்திக்கப் படுகிறது. பாட்டில் நப்பின்னைப் பிராட்டியின் திருநாமத்தை ஸாக்ஷாத்தாக இடாமல் தமிழ்ப்பாஷையின் மரபின்படி 'பரிமளம் மிகுந்த கூந்தலையுடையவொருத்திக்காக' என்று சொல்லப்பட்டிருக்கிறது. தமிழில் கோதையென்று கூந்தலுக்குப் பெயர். வம்பவிழ்கோதை யென்பது பஹுவ்ரீஹி கொண்டது. தமிழர்கள் 'அன்மொழித் தொகை' என்பர்கள். வடமொழியில் सुरभिकुन्तला என்றால் என்ன பொருளோ அதுவேதான் பொருள் வம்பவிழ் கோதை யென்ற விதற்கும். ஈஷத்தும் வாசியில்லை. வேதாந்த வாரியர் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் இப்பாசுரத்தை யுட்கொண்டு ஸாதித்த விடத்தில் * गोदार्थोक्षावमर्दे * என்றதாகக் காண்கிறது. ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களில் தலைவரான தேசிகர் இப்படி ஒருகாலும் ஸாதித்திருக்கமாட்டார். गोदा என்கிற ஸம்ஸ்க்ருதபதம் ஸம்ப்ரதாயத்தில் பெரியாழ்வார் திருமகளாரான ஆண்டாளைச் சொல்லுமேயல்லது வேறொரு வ்யக்தியையும் சொல்லாது. இங்கு ஆண்டாளுக்கு ப்ரஸக்தியே கிடையாது. நப்பின்னைப்பிராட்டி தான் சொல்லப்பட்டிருக்கிறாள். அவளுக்கு **நீளா** என்று பெயரே தவிர **கோதா** என்று பெயர் கிடையாது. ஆகவே नीलार्थोक्षावमर्दे என்றிருக்க வேண்டுவது "गोदार्थोक्षावमर्दे" என்று திரிந்திருப்பது திருத்தத்தக்கதே — என்று விபுலமாகவும் சாஸ்த்ரீயமாகவும் ஸம்ஸ்க்ருதஜ்ஞர்கள் உச்சிமேல் வைத்து மெச்சும்படியாகவும் உபபாதித்திருக்கிறார் அண்ணங்கராரியர். கோஷ்டீபுரம் ஸௌம்ய நாராயணாசார்யப்ரப்ருதிகளான மஹான்கள் இதைக்கண்டு 'இது ஸம்ப்ரதிபந்நமான நிரூபணமே' என்று உகந்தார்கள். சிலர் இதில் வீணான சோத்யங்களைச் செய்து விளக்கில் விட்டில் பட்டது பட்டார்கள். அசோகவனத்தில் பிராட்டியைக் கண்ட திருவடி "அல்லியம் பூமலர்க் **கோதாய்**!" என்று அவளை ஸம்போதித்ததாகச் சொல்லப்படுகிறது. இதை ஸம்ஸ்க்ருதப்படுத்தவேணுமானால் हेगोदे! என்று மொழிபெயர்க்க முடியுமா வென்பதை அவர்கள் ஆராய்ந்திலர். இந்த ப்ரஸங்கத்தில் நம் ஸ்வாமி வெளியிட்ட பாஷாதத்வங்களும் அர்த்ததத்வங்களும் அபரிமிதம். இதற்காக அவதரித்த க்ரந்தங்களும் அநேகம். அவற்றால் நேர்ந்த லோகோபகாரமும் அமிதம். முக்கியமான வோருபகாரத்தைமாத்திரம் இங்குத் தெரிவிக்கிறேன்.

நப்பின்னைப்பிராட்டி இன்னுளென்பதையும் அவளுடைய சரிதை எங்குள்ள தென்பதையும் சிறிதும் தெரிந்து கொள்ளாமல், **ஸத்யா** என்று குறிக்கப்பட்டவொரு க்ஷத்ரிய கந்யகையையே நப்பின்னையாக மருண்டு பல அஸம்பத்தங்களை யெழுதினர் பிறர். அவற்றை நம் ஸ்வாமி யாதவாப்யுதய—தத்வ்யாக்யாந பங்க்திகளைக் கொண்டே நிரஸித்துப் பரமார்த்த முணர்த்தின பெருமை அந்யாத்ருசம். "கோதை பொருட்டா" என்கிற தமிழைப்பார்த்து गोदार्थम् என்று ஸம்ஸ்க்ருதமிடுவது யுக்தமாகுமாகில் 'தங்கை பொருட்டா' என்பதை तङ्गार्थम् என்றும், நங்கை பொருட்டா என்பதை नङ्गार्थम् என்றும் மொழிபெயர்ப்பதும் யுக்தமாகும்—என்று நம் ஸ்வாமி யெழுதிய பின்பும் ஒரு வாதம் தோன்றிற்று. கோதா என்கிற சொல் வடமொழியிலுண்டு; **தங்கா, நங்கா** என்கிற சொற்கள் வடமொழியில் இல்லை; ஆகவே இந்த ஆபத்தி எப்படி பொருந்தும்? என்று. இதன் மேல் வெளிவந்த—ஸ்வாமியின் ஸமாதானமாவது—"நீரே சொல்லும்" என்கிற தமிழ்வார்த்தைக்கு 'नीरे वदत' என்று ஸம்ஸ்க்ருதம் சொல்ல முடியுமோ? வடமொழியில் '**தோயபாநீய நீரக்ஷீராம்பு சம்பரம்**' என்ற அமர கோசத்தின்படி நீரசப்தமுண்டு. அதற்கு ஸப்தமி **நீரே** என்ருகிறது. ஆகவே **நீரே** என்பது வடமொழிதான். இதைக்கொண்டு நீரே சொல்லுமென்பதற்கு 'नीरे वदत' என்னலாமோ? **நீரே** என்பதற்கு வடமொழியில் என்ன அர்த்தமோ அந்த அர்த்தம் பயன்படாத விடத்தில் அதை ப்ரயோகிப்பது பரிஹாஸ்யந்தானே. அதுபோலவே गोदा என்ற வடசொல்லுக்கு எது பொருளோ அப்பொருள் பயன்படாத ப்ரக்ருதஸ்தலத்தில் அச்சொல்லை ப்ரயோகிப்பது தகுதியன்றே—என்று. இவ்வளவோடு இந்த விவாதம் ஓய்ந்தது.

28. இப்படியாக அண்ணங்கராரியர் எடுத்துக்காட்டும் விஷயங்கள் ஆர்ஜவம் பொருந்தி சாஸ்த்ரீயங்களாயிருந்தும் வைதண்டிகர்கள் இவற்றை ருஜுவாக க்ரஹிக்கமாட்டாமல் வீண்வாதங்களில் இறங்கி பங்கப்பட்டு அந்த பங்கத்தை மறைத்துக் கொள்வதற்காக "அண்ணங்கராசாரியர் தேசிகஸூக்திகளைக் கண்டிக்கிருர்; வ்யாகரண துஷ்டங்களென்று தூஷிக்கிருர்" என்றிப்படி பறைசாற்றி பாமரப்ரதாரணம் பண்ணப்பார்க்கிருர்கள். வ்யாகரண தோஷங்களை சங்கித்து ஸமாதானங்களை யெழுதிவைத்தி

ருக்கிறுரே யொழிய வ்யாகரணதுஷ்டங்களென்று தாஸித்திருக்க வில்லை. இதைப்பற்றியும் சிலவிடங்களெடுத்துக் காட்டுகிறேன். த்ராமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவலியில் (122) " इति कथयां श्रीशठारिर्बभूव " என்று தேசிக ப்ரயோகமுள்ளது. வியாகரண சாஸ்த்ரத்தில் * कृञ्चानुप्रयुज्यते लिटि * என்கிற பாணிநிஸூத்ரம் அபவாதமற்ற அநுசாஸநம். कथयांबभूव, कथयामास, कथयांचकार இத்யாதிகளில் बभूव, आस, चकार என்பவற்றைச் சேர்த்தே பிரயோகிக்கவேணும், பிரித்துப்ர யோகிக்கக்கூடாதென்று கட்டுப்படுத்துவதற்காக மேலே காட்டிய அநுசாஸநம் அவதரித்தது. வார்த்திக காரரும் " विपर्यासनिवृत्त्यर्थं व्यवहितनिवृत्त्यर्थं च " என்று இதற்கு ரக்ஷை செய்தார். சாஸ்த்ரம் இப்படியிருக்கையாலே कथयांबभूव என்று சேர்த்தே பிரயோகிக்கவேண்டியிருக்க, * कथयां श्रीशाठारिर्बभूव * என்று எங்ஙனே ப்ரயோகித்தா ரென்னில் ; ரகுவம்சகாவ்யத்தில் (9-61.) * तं पातयां प्रथममास पपात पश्चात् * என்று காளிதாஸ மஹாகவி ப்ரயோகித்தார். அங்கு வ்யாக்யாதாவான மல்லிநாதர் " अपप्रयोग इति पाणिनीयाः " என்று முடித்துப் போனாலும், காளிதாஸமஹாகவி ஆதாரமில்லாமல் பிர யோகிக்கமாட்டாரென்கிற தைரியத்தைக்கொண்டும் * प्रभ्रंशयां यो नहुषं चकार * என்று மற்றுமுள்ள பிரயோகங்களைக் கொண்டும் தாம் ப்ரயோகித்திருக்கிறுர்.

29. இங்ஙனே மற்றொன்றும். வியாகரணத்தில் *ப்ராணி தூர்ய ஸேநாங்கங்களுக்கு ஏகவத்பாவம் அநுசாஸநஸித்தம். இதற்கு யாதோரபவாதமும் கிடையாது. * सर्वो द्वंद्वो विभाषयैकवद्भवति * என்ற பரிபாஷையில் வைகல்பிகமாகச் சொன்னது இதை அபவதிக்கவன்று என்றும் வையாகரண ஸித்தாந்த முள்ளது. அது பரிபாஷேந்து சேகரத்தில் காணலாம். சாஸ்த்ரஸரணி இப்படியிருக்க பாதுகாஸஹஸ்ரத்தில் (16-1.) * मुखबाहूरुपादेभ्यः * என்று எங்ஙனே ப்ரயோகித்தார்? இங்கு அநுசாஸந ஸித்தமான ஏகவத்பாவம் இல்லாதது என்? என்னில் ; பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்தில் * यामिस्त्वं स्तनबाहुदृष्टिभिरिव * என்று ப்ரயோகித்திருப்பது கண்டு, சாஸ்த்ராதாரமில்லாமல் பட்டர் ப்ரயோகிக்கமாட்டாரென்று கொண்டு அதைப் பின்பற்றி ப்ரயோகித்தார். " भवतीसंबन्धदृष्टया हरिं

पश्येम" என்ற அவருடைய பிரயோகத்தைப் பின்பற்றித்தானே தாமும் "भवतीपादलाक्षारसाङ्कम्" என்று பிரயோகித்தது. தத்வடீகை யில் ஸ்ரீபாஷ்யேப்ரயுக்தமான ஸ்தேம சப்தம் ஸாதுவா? என்று விசாரிக்கப்புகுந்து * नानाव्याकरणाभिज्ञबहुविद्वत्परिग्रहे। शब्दासाधुत्वमाहुर्ये शाब्दिकांस्तान्न मन्महे ॥ * என்று காரிகையிட்டு முடித்தார். பல வியாகரணங்களையறிந்த பலவித்வான்கள் செய்த ப்ரயோகங்களைப் பின்பற்றி தாராளமாக ப்ரயோகிக்கலா மென்றும், லக்ஷ்யைகசக்ஷுஷ்கர்களா யிருக்க வேண்டுமத்தனையென்றும் சிக்ஷிக்கிறவளவோடு நிற்காமல் தாமும் அந்நிலையிலே நின்று பலவும் பிரயோகித்துக் காட்டுகிறார்—என்பன அண்ணங்கராரியருடைய நிரூபணங்கள். இவற்றால் இவர் வேதாந்தவாரியருடைய பிரயோகங்களுக்கு பூஷணம் செய்பவரே யொழிய தூஷணம் செய்பவரல்லர் என்பது ப்ராமாணிகர்களுக்குப்புலனாகும். ப்ராப்த விஷயங்களிலே யதாவஸ்திதார்த்தங்களை அப்ரகம்ப்யமாக நிரூபிக்கிறாரென்பது கொண்டே * अशक्तास्तत्पदं गन्तुं ततो निन्दां प्रकुर्वते * என்கிற ரீதியில் ஆரோபிதமாகச் சில தூஷணங்களையிட்டு நிந்திக்கப்பார்க்கிறார்கள்.

30. கோதாஸ்துதியில் * तातस्तु ते मधुभिदः स्तुतिलेशवश्यात् कर्णामृतैः स्तुतिशतैरनवाप्तपूर्वम्। त्वन्मौलिगन्धसुभगामुपहृत्य मालां लेभे महत्तरपदानुगुणं प्रसादम् ॥ * என்றொருச்லோகமுள்ளது. இதில் இரண்டாவது பாதம் 'கர்ணாம்ருதஸ்துதிசதை:' என்று ஸமஸ்தபதமாயிருந்தது வ்யஸ்த பதமாகப் பாடம் வந்திருப்பது ரஸபங்கம் என்று அண்ணங்கராரியருடைய சுவைமிக்க நிரூபணம். பிறர்கொண்ட பாடத்திலுள்ள சுவைக்கேடு என்ன? இவர் காட்டும் பாடத்திலுள்ள சுவைமிகுதி என்ன? என்பார்க்கு அவருடைய நிரூபணங்களை யெடுத்துக் காட்டுகிறேன். ஆண்டாளே! உம்முடைய திருத்தகப்பனார் நூற்றுக் கணக்கான செவிக்கினிய பாசுரங்களைப் பாடியுங்கூட அதனால் பெரியாழ்வாரென்கிற பெயரைப் பெறவில்லை; நீர் சூடிக்களைந்த மாலையைப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து அதனாலேயே அப்பெயரைப் பெற்றார்—என்பதாக * கர்ணாம்ருதை: ஸ்துதிசதை: * என்கிற வ்யஸ்தபாடத்தில் அர்த்தம் சொல்லப்படுகிறது. இதில் யாதொரு ரஸமுமில்லை. அவ்வளவேயுமன்று. திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியு மருளிச்செய்துங்கூட அடையாத

பெயரை சூடிக்களைந்த பூமாலையை ஸமர்ப்பித்ததனால் அடைந்தார் என்று சொல்லுகிறபக்ஷத்தில் அந்த திவ்யப்ரபந்தங்கள் முன்பே அவதரித்தனவென்றும், ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை ஆழ்வார் பெருமாளுக்கு ஸமர்ப்பித்தது அந்த திவ்யப்ரபந்தங்கள் அவதரித்த பிறகே யென்றும் தேறுகிறது. இது ஸங்கதமாகாது. பெரியாழ்வார் திருமொழியில் (2-2-6.) * மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு, இன்னிசைக்கும் வில்லிபுத்தூரினிதமர்ந்தாய்! * என்கிற பாசுரத்தில் சூடிக்கொடுத்த சுடர்க் கொடியின் சரிதை கூறப்பட்டிருக்கிறது. 'மின்னனைய நுண்ணிடையார்' என்று ஸ்த்ரீ ஸாமாந்யவாசகமான சொல்லானது சிறப்பாக ஆண்டாளைக் குறிக்கிறது. அவளுடைய குழல் மேல் நுழைந்த வென்றது—அவளுடைய கூந்தற்பரிமளங் கொண்ட பூமாலையில் ஆசை வைத்தமை சொன்னவாறு. வண்டு என்றது "தூவியம்புள்ளுடைத் தெய்வவண்டு" என்று திருவாய்மொழியில் வண்டாகச் சொல்லப்பட்ட எம்பெருமானைச் சொன்னபடி. அவன் [இன்னிசைக்கும்] கோதை சூடிக்களைந்த மாலைதான் எனக்கு வேணும் என்று சொல்லப் பெற்ற என்றபடி. ஆக, கோதை சூடிக்களைந்த மாலையை ஸமர்ப்பித்த பிறகே அவ்வரலாற்றை உள்ளுறைபொருளாக வைத்துப் பாசுரம் பாடினரென்பது விளங்கும்.

ஆனால் இவ்விஷயம் இங்கு ப்ரதானமாக விவக்ஷிதமன்று. * இன்கவிபாடும் பரமகவிகள் என்று கொண்டாடப்பட்ட முதலாழ்வார்கள் நூறுநூறாகப் பாசுரம் பாடினார்கள்; பெரியாழ்வா ரென்னும் பெயர் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. அவர்களுக்கடுத்த திருமழிசையாழ்வார் இருநூறு பாடினார்; அவர்க்கும் கிடைக்கவில்லை. அவர்க்கடுத்த நம்மாழ்வார் பலபலநூறுகள் பாடினார்; அவர்க்கும் கிடைக்கவில்லை. இப்படி மற்றை யாழ்வார்களுக்கு அரிதான பட்டப்பெயர் உமது திருத்தகப்பனார்க்குக் கிடைத்ததானது உம்மைப்புற்றின அதிசயத்தினாலே—என்று சொல்லுவது தான் ஔசித்யத்திற்குச் சேரும். இவ்வர்த்தம் வ்யஸ்தபாடத்தில் கிடைக்க வழியில்லை. 'கர்ணாம்ருதஸ்துதிசதை:' என்ற ஸமஸ்தபாடத்தில் कर्णामृतानि स्तुतिशतानि येषां तैः என்று விக்ரஹமாகி மற்றையாழ்வார்களைக் குறிக்கும்—என்பது நம் ஸ்வாமியின் நிபுண

மான நிரூபணம். தமக்குப் பெரியாரிடம் கிடைத்த பாடத்தைக் கொண்டே அவர் சொல்லுவது. இதை ஆஸ்திகர்கள் எப்படி உதைக்கமுடியும்? * कलकण्ठगणालापे * இத்யாதி.

31. எம்பெருமானுடைய வ்யாப்தியில் பரிஸமாப்ய வர்த்தமாநத்வம்—அதாவது வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தியோடே உள்ளும்புறமும் வியாபித்திருக்கை என்பது *பரந்த தண்பரவையுள் நீர்தொறும் பரந்துளன்* என்பது முதலான பாசுரங்களின் வியாக்கியானங்களிலே பிள்ளான் முதலான பூருவாசாரியர்களாலே அருளிச்செய்யப்படுகிறது. இவ்வர்த்தத்தை வேதாந்தாசாரியர் ந்யாய ஸித்தாஞ்ஜநத்திலே சங்காஸமாதாந ப்ரபஞ்சநபூர்வகமாக நிலைநாட்டியிருக்கிறாரென்பதை நம்ஸ்வாமி ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியாதி அநேகக்ரந்தங்களிலே ப்ரபலவிபுல நிரூபணம் செய்திருக்கிறார். இதில் பிறர் அஸ்தாநே மிகவும் ப்ரத்யவஸ்தாநம் செய்தார்கள். பகவான் வியாபிக்கும்போது அவனுடைய ஸ்வரூபம் ஓரிடத்தில் ஸமாப்தமாயிற்றென்றால் மற்றோரிடத்தில் எப்படி வியாபிக்க முடியுமென்றும், அது அவனுடைய அகடிதகடநாசக்தி விசேஷத்தாலே கூடுமென்னில்; அகடிதங்களை கடிப்பிக்கிறதென்பது பகவானிடத்தில் கிடையாது, அது அர்த்தமற்ற வார்த்தையென்றும் ஓர் உத்தமாச்ரமி எழுதிக் கொண்டிருந்தார். இங்கே நம் ஸ்வாமியின் நிரூபணத்தைச் சுருக்கமாகவும் ஸாரமாகவும் எழுதுகிறேன். ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் இவ்விஷயத்தைப் பரக்க விசாரித்துக் கொண்டு போய் முடிவாக "अतो यथागमम्" இத்யாதி வாக்யங்களாலே "சாஸ்த்ரம் சொன்னபடியே நாம் கைகூப்பவேணுமே யொழிய இதில் ஒருவிதமான துராக்ஷேபமும் செய்யத்தகாது; இவ்விஷயத்தை ப்ரஹ்மஸூத்ரகாரரே *க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வசப்தகோபோ வா* என்கிற ஸூத்ரத்தாலே சங்கித்து, *ச்ருதேஸ் **து** சப்தமூலத்வாத்* என்கிற ஸூத்ரத்தாலே ஸமாஹிதமாக்கி யிருக்கிறாரன்றோ" என்று நிகமனஞ் செய்திருக்கிறார் நிகமாந்தாசாரியர். அந்த ப்ரஹ்ம ஸூத்ரங்கள் [அதிதேசரூபேண] இங்கு எடுத்துக் காட்டப்படாமலிருந்தால் இந்த சர்ச்சையை ஓயாமல் வளர்த்திக் கொண்டுபோகலாம். எடுத்துக்காட்டியுள்ள ப்ரஹ்மஸூத்ரமோ துர்வாதிகளின் மிடற்றைப் பிடிக்கின்றது. அந்த ஸூத்ரார்த்தம் இன்னதென்பது மிதப்ராஜ்ஞர்

களுக்கும் விசதமாகத் தெரியும்படி நம்ஸ்வாமியே யெழுதியிருக்கி றார். “சாரீரக மீமாம்ஸையைப்பற்றிய அறுபத்திரண்டு வார்த்தா மாலை” என்கிற ஸ்ரீஸ்வாமியின் க்ரந்தம் ஸ்ரீராமாநுஜன் 53ல் ஸமீபகாலத்தில் வெளிவந்திருக்கிறது. அதில் (பக்கம் 20ல்) 46, 47, 48 லக்கமிட்ட விஷயங்கள் இவையே. அவற்றை அப்ப டியே இங்கெடுத்துக் காட்டுகிறேன்:—

“இனி, க்ருத்ஸ்நப்ரஸக்தி யதிகரணத்தின் ப்ரமேயம் விளக்கப்படுகிறது: இதுவும் இரண்டாமத்யாயத்தின் முதற்பாதத்திலுள்ளது. * कृत्स्नप्रसक्तिर्निरवयवत्वशब्द-कोपो वा * என்பது பூர்வபக்ஷ ஸூத்ரம். * ச்ருதேஸ் து சப்தமூலத்வாத் * என்பது ஸித்தாந்த ஸூத்ரம். ப்ரஹ்மம் ஜகத்காரணம் என்னும் வாதத்தில் ப்ரஹ்மமே ஜகத்தாகப் பரிணமிப்பதாய்த் தேறுகிறது. ப்ரஹ்மமோ நிரவயவமானது; அது ஜகத்தாகப் பரிண மிக்கும்போது ப்ரஹ்மம் முழுவதுமே காரியப்பொருளாகப் பரிணமிக்க வேண்டிய தாகிறது. ஏகதேசேந பரிணமிக்கிற தென்னும் பக்ஷத்தில் ப்ரஹ்மம் நிரவயவ மென்று சொல்லுகிற ச்ருதி விரோதிக்கும். ஆகையாலே ப்ரஹ்மம் ஜகத்காரணமாக வொண்ணாது—என்கிற பூர்வபக்ஷமே முந்தின ஸூத்ரத்தின் பொருள். (இதைச் சிறிது விவரிப்போம்.) கீழே உபஸம்ஹாராதிகரணத்தில் * क्षीरवद्धि * என்று க்ஷீரத்ருஷ் டாந்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. க்ஷீரத்ருஷ்டாந்தம் பொருந்தாது. க்ஷீரம் ஸாவ யவமாகையாலே அதுபோல ப்ரஹ்மமும் ஸாவயவமென்ன வேணும். அப்படி கொண் டால் நிரவயவத்வ ச்ருதி கோபிக்கும்: நிரவயவமாகில் ப்ரஹ்மம் க்ருத்ஸ்நபாகத்தாலும் பரிணமமடைந்ததாக வேணும். ஆகட்டுமேயென்னில், க்ருத்ஸ்நமும் ஒரு கார்யப்பொரு ளாகப் பரிணமித்தபோது மற்றொரு காரியப்பொருளாகப் பரிணமிக்க ப்ரஸக்தி யில்லை. ஆகையாலே ப்ரஹ்மகாரணத்வவாதம் ஒவ்வாது—என்பதாகப் பூர்வபக்ஷம்.”

“இதன்மேல் ஸித்தாந்தமுணர்த்தும் ஸூத்ரம்—* ச்ருதேஸ்து சப்தமூலத்வாத் * என்பது. துசப்தம் பூர்வபக்ஷத்தை வ்யாவர்த்திப்பிக்க வந்தது. ப்ரஹ்மம் நிரவயவ மென்பதும், அது கார்யப்பொருளாகப் பரிணமிக்கிற தென்பதும் ஆகிய இரண்டும் ச்ருதி ஸித்தமான அர்த்தங்கள். ப்ரஹ்மமோ சப்த ப்ரமாணமொன்றினாலேயே அறியப் படுமது; ஆகையாலே கீழே தோன்றின பூர்வபக்ஷம் யுக்தமன்று என்பதாக ஸூத்ரார்த் தம். இதைச்சிறிது விவரிப்போம். ஸாவயவமான வஸ்துதான் ஏகதேசத்தாலே பரி ணமிக்க முடியுமென்றும், நிரவயவமான வஸ்துவானது அப்படி ஏகதேசத்தாலே பரிண மிக்கமாட்டாமல் க்ருத்ஸ்நாம்சத்தாலும் பரிணமித்தாக வேணுமென்றும் ஒரு நியதி சொல்லுவதானது லௌகிக பதார்த்த த்ருஷ்டியினால்தானே. இப்படியொரு வ்யாப்தி கல்பிக்க வேணுமானால் பரப்ரஹ்மம் தவிர மற்ற வஸ்துக்களில் மாத்திரமே கல்பிக்க லாம். ப்ரஹ்மத்தினிடத்திலும் இந்த வ்யாப்தி கொள்ள அவசியமில்லை. ஏனென்னில், ப்ரஹ்மத்தை நாம் சாஸ்த்ரங்கொண்டே அறிகிறோம். அந்த சாஸ்த்ரமானது ப்ரஹ்மத் திற்கு நிரவயவத்வத்தையும் பஹுபவநத்தையும் [அதாவது, நாநாவஸ்துக்களாகப் பரி ணமிப்பதையும்] ஓதியிருக்கின்றது. அது ப்ரஹ்மத்தினுடைய அநிர்வசநீயமான சக்தி விசேஷத்தைப் பொறுத்தது. அப்ரமேய அத்புத சக்தியுக்தமான ப்ரஹ்மத்தினிடத்திலே நாம் லௌகிகவஸ்து த்ருஷ்ட்யா சோத்யம் செய்வது தகாது. ஒன்று பாருங்கள். கண் ணுடையவன்தான் காணமுடியும், காதுடையவன்தான் கேட்கமுடியும்; கண்ணிலாதான்

காணகில்லான்; செவியிலாதான் கேட்ககில்லான்—என்று ஒரு வ்யாப்தி சொல்ல நினைத்தால் பரப்ரஹ்மத்தவிர மற்ற பேர்களிடத்தில்தானே இப்படிச் சொல்ல முடியும். पश्यत्यचक्षुः स शृणोत्यकर्णः, अपाणिपादो जवनो ग्रहीता * என்று ஓதப்படுகிற பரமபுருஷனிடத்திலே இந்த வ்யாப்தி பயன் பெறாதன்றோ. ஆகவே உலகில் காணும் நியாயத்தைக் கொண்டு ப்ரஹ்மத்தினிடம் சோத்யம் செய்வது கூடாது."

"வேதாந்திகள் இங்கு விசேஷித்துக் குறிக்கொள்ளவேண்டிய விஷயமுண்டு: பரப்ரஹ்மத்திற்கு ஜகதாத்மநா பரிணாமம் போலவே ப்ரதிவஸ்து பூர்ணத்வமும் ச்ருதிஸித்தமாயிருக்கின்றது. நிரவயவமான ப்ரஹ்மம் வஸ்துதோறும் எங்ஙனே பரிஸமாப்ய வர்த்திக்கமுடியும்? என்று சிலர் சோத்யம் செய்வதுண்டு. அந்த சோத்யம் * ச்ருதேஸ்து சப்தமூலத்வாத் * என்கிற இந்த ஸூத்ரத்தினால் சிக்ஷிக்கப்பட்ட ந்யாயத்தினாலேயே மடிந்தொழிகின்றது. இவ்விஷயத்தை ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் வெகு சதுரமாக அருளிச்செய்து முடித்திருக்கிறார். அப்படியிருந்தும் இதில் இன்னமும் சிலர் தெளிவுபெறாமல் கலங்கியிருக்கிறார்கள். பகவான் ஒரு வஸ்துவிலே பரிஸமாப்ய வர்த்தித்துவிட்டால் அவ்வளவோடு பகவான் உபக்ஷீணனாய் விடுகிறபடியால் மற்றொரு பொருளில் வியாபிக்க எப்படிமுடியுமென்று இந்த சோத்யத்தையே திருப்பித் திருப்பிச் செய்துகொண்டு காலங் கழிக்கிறார்கள். அந்தோ! அன்னவர்கள் * ச்ருதேஸ்து சப்தமூலத்வாத் * என்கிற ஸூத்ரம் என்ன சிக்ஷிக்கிறதென்பதையும் இந்த ஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி என்ன அருளிச்செய்கிறாரென்பதையும் சிறிதும் நோக்க மாட்டிற்றிலர். * शब्दैकप्रमाणकत्वेन सकलेतरवस्तुविसजातीयत्वादस्यार्थस्य विचित्रशक्तियोगो न विरुध्यते * என்பது ஸ்ரீபாஷ்யஸூக்தி. இதைப்பற்றின விரிவுகளை நம்முடைய ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா, அந்புதசக்தி முதலான க்ரந்தங்களிலே காண்க."

32. ஆக இவ்வளவு க்ரந்தங்களினால் பூர்ணத்வவிசாரம் ஸுபரிஷ்க்ருதமாக முடிக்கப்பட்டது. இதில் விவாதத்தை வளர்த்து நின்ற பிறர் விடைகூற வேண்டிய விஷயம் ஒன்றேயுள்ளது. (அதாவது) ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் ப்ரதிவஸ்து பூர்ணத்வத்தைப் பற்றி விசாரம் செய்துபோய் நிகமநம் செய்யுமளவில் மேலே குறித்த ப்ரஹ்மஸூத்ரத்தை எதற்காக எடுத்துக் காட்டினார்? என்கிற கேள்வியொன்றுக்கே விடைகூறவேண்டும். "பகவானுடைய சக்தி அநிர்வசநீயமாகையாலே அப்படிப்பட்ட சக்தியோடு கூடின பகவான்விஷயத்தில் ஒருவிதமான குசோத்யமும் செய்யலாகாது" என்று துராக்ஷேபகர்களின் வாயையும் கையையும் கட்டிப்போடுகிற ஸூத்ரம் இது என்று ப்ரவசனம் செய்துகொண்டே தாங்களே துராக்ஷேபம் செய்துகொண்டிருந்தால் இது என்ன வேதாந்த நிர்வாஹமோ? என்று அண்ணாஸ்வாமி வியக்கிறார்.

33. கைவல்ய விஷயத்தில் பலவித்வான்கள் ராமாயணமும் பாரதமுமாக எழுதிக் கொண்டிருந்தார்கள். அதை நம் ஸ்வாமி

ஸாரமாகச் சுருக்கியிருக்கிறார். அதையும் சிறிது எடுத்துக்காட்டுகிறேன். "கைவல்ய விஷயம் ஸ்ரீபாஷ்யத்தில் ஒருவிதமாகவும் கீதா பாஷ்யத்தில் மற்றொருவிதமாகவும் இருப்பதாக வேதாந்தவாரியருடைய திருவுள்ளம். ஸ்ரீபாஷ்யத்தில் 'अप्रतीकालम्बनान्नयतीति बादरायण:....'' என்ற ஸூத்ரவிவரணத்தில் "पञ्चाग्निविदोऽपि अर्चिरादिना गतस्य ब्रह्मप्राप्त्यपुनरावृत्तिश्रवणाच्च ; अत एव तत्क्रतुनयात् प्रकृतिविनिर्मुक्तब्रह्मात्मकात्मानुसन्धाने सिद्धम् " என்றருளிச் செய்திருக்கையாலே கேவலனுக்கு ப்ரஹ்ம ப்ராப்திரூபமான பலன் ஸ்ரீபாஷ்யஸம்மதமாகத் தேறுகின்றது. கீதாபாஷ்யத்திலோ வென்னில், பஞ்சாக்நிவித்யா நிஷ்டனை கேவலனுக்கு ब्रह्मात्मकप्रकृतिवियुक्तात्मस्वरूपोपासनम् , प्रकृतिवियुक्तात्मस्वरूपावाप्तिरूपफलम् अर्चिरादिगत्या परमपदप्राप्तिः अपुनरावृत्तिश्च அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யஸூக்திகள் பரஸ்பரவிருத்தம் போல் தோற்றும். இந்த விரோதத்தை சமிப்பிக்கவேண்டி வேதாந்தவாரியர் மதுவித்யாந்யாயத்தைத் திருவுள்ளத்திலே கொண்டு ப்ரக்ருதி வியுக்த ஆத்மாநுபவத்தை அவாந்தரபலனாக வைத்தும், ப்ரஹ்மாநுபவத்தை ப்ரதாநபலனாக வைத்தும் நிர்வஹித்தார். [வஸ்துத: இப்படி நிர்வஹிக்க ஔசித்யமுண்டோவென்று பார்த்தால் இல்லை. அவாந்தரபலனைக் கல்பிக்கக் கூடிய ப்ரமாணம் துர்லபம். மதுவித்யாந்யாயத்திற்கு இங்கு ப்ரஸக்தியில்லை. பஞ்சாக்நி வித்யா நிஷ்டனுக்கு मूर्धन्यनाड्या निष्क्रमणமும் இடையில் வ்யவதாநமில்லாமல் பலனடைவதும் ச்ருதப்ரகாசிகாஸித்தம். ஜாபகோபாக்யானத்தில் வ்யவதாநேந பலப்ராப்தியானதை இங்கே நிதர்சநமாகக் காட்டத் தகாது. ஏனென்னில் அவனுக்கு நேர்ந்த ப்ரஹ்மகாய நிஷேவணரூபமான வ்யவதாநம் ஜிஹ்வைவழியாக நிஷ்க்ரமணத்திலானது—இத்யாதி விஷயங்கள் பல இருக்கின்றன.] இப்படி நிர்வஹிக்கும்போது கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திக்கு அஸ்வாரஸ்யம் விளைகிறது. அதை ஸஹித்துக் கொள்ள வேண்டியது தவிர வேறு கதியில்லையென்று கொண்டு "एकग्रन्थशकलास्वारस्यं बहुग्रन्थस्वारस्याय ग्राह्यम् " என்று ந்யாயஸித்தாஞ்ஜநத்திலே பணித்தார்."

"ஒரு க்ரந்தத்திற்கும் அஸ்வாரஸ்யமில்லாதபடி நிர்வஹிக்கக்கூடிய பொருவழியைக் காட்டினால் வேதாந்தவாரியர் கைக்கொள்ள மாட்டாதவரல்லர். கீதாபாஷ்ய ஸ்ரீபாஷ்ய ஸூக்திக

ருக்குப் பரஸ்பரம் ஒரு விரோதமும் கிடையாது. கீதாபாஷ்யத்தில் சொல்லப்பட்டபடி ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவமே கேவலனுக்கு ப்ரதானபலன். ப்ரஹ்மப்ராப்தியைச் சொல்லுகிற ஸ்ரீபாஷ்யஸூக்தி இதற்கு விருத்தமன்று. எப்படியென்னில் ஸ்ரீபாஷ்யத்தில் "ब्रह्मप्राप्त्यपुनरावृत्तिश्रवणाच्च ब्रह्मात्मकस्वात्मानुसन्धानं सिद्धम्" என்று அருளிச் செய்திருக்கையாலே, தத்க்ரதுந்யாயத்தாலே ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மப்ராப்தி தான் பலனாகத் தரும். ப்ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸநத்திற்கு இதுதானே அநுரூபமான பலனாகும். ஆக, விசேஷணதயா பரப்ரஹ்மத்துக்கு ப்ராப்யத்வம் தேறுகிறபடியால் இவ்வழியாலாகும் ப்ரஹ்மப்ராப்திதான் ஸ்ரீபாஷ்யத்தில் சொல்லப்பட்டதாக விளங்குகிறது. ஒருவிரோதமுமில்லை யன்றோ. கைவல்யத்திலும் பரப்ரஹ்மத்திற்கு ப்ராப்யத்வமுண்டென்னில், அந்த முக்திக்கு இழிவு சொல்லுவானேன்? என்னில், ப்ரஹ்மாநுபவம் அப்ரதானமாகவும் ஆத்மாநுபவமே ப்ரதாநமாகவு மன்றோ ஸித்திக்கிறது. ஆனதுபற்றியே அது ஹேயமெனப்படுகிறது."

34. இவ்விதமாக ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்ய ஸூக்திகள் ஒரு விரோதமுமின்றிக்கே எளிதாக ஸமந்விதமாகிறபடியாலே கீதாபாஷ்ய ஸூக்திக்கு அஸ்வாரஸ்யம் கல்பிக்க் வேண்டியதேயில்லை. இப்படிப்பட்டவழி ஸ்புரியாமையினாலே ஒன்றுக்கு அஸ்வாரஸ்யம் கல்பிக்க நேர்ந்தது. * यतिप्रवरभारतीरसभरेण नीतं वयः * என்றும் * ஏரணிகீர்த்தியிராமாநுசமுனி யின்னுரைசேர், சீரணிசிந்தையினேம் சிந்தியோ மினித் தீவினையே * என்று மிருப்பவர்க்கு பகவத்ராமாநுஜஸூக்தியில் அஸ்வாரஸ்யகல்பநம் ஆவச்யகமன்றே. எல்லாம் ஸ்வரஸமாகவே நிர்வஹிக்கப் படுவதற்கு மார்க்கமிருக்கிறதென்று காட்டினால் "நாண் பெரியோமல்லோம்நாம் நன்றுந் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்று ஸௌமநஸ்யத்தின் எல்லையிலே நின்று கூறின அவர்க்குப் பரமானந்தமேயன்றோ. 'அம்மஹாபுருஷருக்கு இச்சிறியவர்தான் வழிகாட்டுகிறவரோ?' என்கிற க்ஷேபந்தான் அடுத்தபடியாக வெளிவரும். இன்று நேற்று இவர் காட்டுகிற வழியன்றிது; ஏற்கெனவே பூருவர்கள் காட்டிவைத்த வழியைத்தான் இவர் எடுத்துக்காட்டின ராகையாலே வீணாக க்ஷேபிக்க விரகில்லை. வ்ருதாபிநிவேசத்தினால் கீதாபாஷ்யஸூக்திக்கு அஸ்வா

ரஹஸ்யம் கல்பித்துத்தாருகவேண்டு மென்று பிறர் போராடினுல் இது எவ்வளவு ஸமஞ்ஜஸ மென்பதை அவர்களுக்குள்ளேயே மஹாவிவேகிகளாயிருப்பார் பரிசீலிக்கவேணு மத்தனே.

35. பகவத்க்ருபையைப் பற்றி ஸஹேதுகமா? நிர்ஹேதுகமா? என்கிற வொருவாதம் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் வீணுகவளர்ந்து வருகிறது. ஸஹேதுகமென்று வேதாந்தவாரியருடைய மதமென்றும் நிர்ஹேதுகமென்று வேறு சில ஆசார்யர்களின் மதமென்றும் இப்படியொரு கொள்கை பரவியிருக்கின்றது. நிர்ஹேதுகக்ருபா வாதிகளில் தலைவரான வேதாந்த வாசிரியரை ஸஹேதுகவாதிகளுக்குத் தலைவராகக் கூறுவது ஆச்சரியங்களில் தலையானது. இவ்விஷயத்தில் அண்ணங்கராசிரியர் அவருடைய வசனங்களை அபரிமிதமாக எடுத்துக்காட்டியுள்ளார். இரண்டொன்றை மாத்திரம் இங்குக் காட்டுகிறேன். அபயப்ரதாநஸாரத்தொடக்கத்தில் "नमस्तस्मै कस्मैचन भवतु निष्किञ्चनजनस्वयंरक्षादीक्षासमधिकसमिन्धानयशसे" என்கிருர். அகிஞ்சநஜநங்களை ஸ்வயமாகவே ரக்ஷிப்பதில் தீக்ஷை கொண்டிருப்பதனுல் எம்பெருமானுக்குக் கீர்த்தி மிக்கிருப்பதாக இதில் சொல்லப்படுகிறது. ஸஹேதுகமாக ரக்ஷிப்பதுதான் எம்பெருமானுக்குப் புகழ் என்பவர்களுக்கும் இந்த ஸ்ரீஸூக்திக்கும் ஏதேனும் ஸம்பந்த முண்டோ? அன்றியும், வேதாந்தவாசிரியர் அமலனுதிபிரானுக்கு முனிவாஹந போக மென்ருெரு வியாக்கியானமிட்டு அதனை ரஹஸ்யக்ரந்தங்களில் ஒன்ருகச் சேர்த்திருக்கிருர். அதில் அவதாரிகை தொடங்கும்போதே "காரணவிசேஷம் இன்னதென்று அறுதியிட அரிதாயிருப்பதொரு பகவத் கடாக்ஷத்தாலே" என்கிருர். இதனுல் பகவத்க்ருபை நிர்ஹேதுகமே யொழிய ஸஹேதுகமன்று என்பது அவருடைய ஸித்தாந்தமென்று விளங்கவில்லையா? நிர்ஹேதுகமென்று சொன்னுல் நாம் ஒன்றும் செய்யவேண்டாமென்று தேறிவிடுமே யென்று கொண்டே பிறர் ஸஹேதுகவாதம் பண்ணுகிருர்கள். நாம் கனக்கச் செய்தாலுங்கூட இதற்காகப் பேறு கிடைப்பதன்று, அவனுடைய கேவலக்ருபையினுல்தான் கிடைக்கிறதென்று நினைக்க வேணுமென்று சிக்ஷிக்கிறவரன்ருே வேதாந்தவாரியர். அவன் கொடுக்கிற பேற்றுக்கும் நாம் செய்கிற அபராத நிர்விசேஷங்களான காரியங்களுக்கும் என்ன ஸம்பந்தம்.

36. சரணாகதிதீபிகையென்று பெயரிடப் பெற்ற தீபப்ரகாசஸ்தோத்ரத்தில் " त्वत्किङ्करत्वविभवे स्पृहयाऽपराध्यन् " என்கிறார். எம்பெருமானுக்கு நாம் அடிமைசெய்ய ஆசைப்படுவதுதானும் அபராதமென்று இதில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுகிறது. ப்ராப்தமான பகவத்கைங்கர்யத்திற்கு ஆசைப்பட்டால் அது எப்படி அபராதமாகுமென்று விமர்சிக்கவேணும். ஸ்ரீவசநபூஷணத்தில் "நெடுநாள் அந்யபரையாய்ப் போந்த பார்யை லஜ்ஜாபயங்களின்றிக்கே" இத்யாதி ஸ்ரீஸூக்திகளால் அருளிச் செய்யப்பட்ட அர்த்தந்தானே மேலே குறித்த ச்லோகமாகப் பரிணமித்திருக்கிறது. ஆக, அபராதகோடியிலே பரிகணிக்கப்படவேண்டியதான நம்முடைய யத்கிஞ்சித் கார்யத்தை அவன் செய்தருளும் ஒப்பற்ற சேமத்திற்கு ஹேதுவென்று சொல்லுவதா விவேகிகளின் பணி? நாம் நல்லன செய்தாலுங்கூட அதுவும் அவனாலே வந்ததென்று உள்ளபடி நினைக்கும்படி ரஹஸ்யத்ரயஸாரத்தில் பெரியச்லோகமிட்டு ஸ்தாபிக்கிறார்— * उपायः स्वप्राप्तेरुपनिषदधीतस्स भगवान्........निदानं तत्रापि स्वयमखिलनिर्माणनिपुणः ॥ " என்று. இதில் நம் ஸ்வாமியினுடைய நிரூபணங்கள் வெகு விபுலம், வெகு அற்புதம். இங்கு விரிவுக்கிடமில்லை.

37. வேதாந்தவாசிரியர் "செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே" என்று கூசாமல் கூறியுள்ளார். ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி ஸகலாசார்யர்களுடையவும் ஸித்தாந்தம் இதுவேயாயினும் மற்ற ஆசாரியர்கள் பாசுரமிட்டுச் சொல்லவில்லை, இவர் பாசுரமிட்டுச் சொன்னார் என்பதுவே வாசி. ஸம்ஸ்க்ருத வேதாந்தங்களுக்குத் **தெளியாத மறை நில**மென்று விருது சாத்தினார் வேதாந்தாசார்யர். அந்த ஸம்ஸ்க்ருத வேதாந்தங்களுக்கு நிர்வாஹகரென்பதுபற்றியே வேதாந்தாசார்யரென்று பட்டப்பெயர் பெற்றவர்தாமே தம் வாக்கினாலேயே அந்த வேதாந்தங்களைத் **தெளியாத மறைநில**மென்றால் இது ஆழ்ந்து அநுபவித்துச் சொல்லுகிற வார்த்தையாகத்தானே யிருக்கவேண்டும். ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தில் தெளியாத நிலங்கள் எவை? அவற்றை எந்தப் பாசுரங்களைக் கொண்டு எவ்வண்ணம் தெளிந்து கொண்டார்? இதை நன்கு உபபாதித்துக் காட்டவேணும் என்று ப்ரச்நபத்ரிகை கொடுத்தால் இதற்கு ஸமஞ்ஜஸமாக விடையிறுக்க வல்ல வித்வான் ஒருவ

ருளரோ? "தமிழ்ப்பாட்டைக் கொண்டா வேதாந்தார்த்த நிர்ணயம் பண்ணுவது?" என்று ஏசுகிற வித்வான்களை மலிந்து கிடக்கின்றனர். "தேசிகன் ஸாதித்திருப்பது வாஸ்தவந்தான்; அது ஒரு காரணார்த்தமாக அதிசயோக்தியாயும் அதிவாதமாகவும் சொன்னது" என்று சொல்லுகிற வித்வான்கள் பலரையும் பார்த்திருக்கிறேன். நம் அண்ணாஸ்வாமி யொருவரே இவ்விஷயத்தில் ஆழ்ந்து விஷய ரத்னங்களை யெடுத்துக் காட்டினவர். அவருடைய நிரூபணங்களில் ஒன்றிரண்டு காட்டுகிறேன்.

38. மேலே யெடுத்துக் காட்டிய *செய்ய தமிழ்மாலைகள் நாமித்யாதி பாசுரத்தில் "தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றேனே" என்னாமல் "தெளிகின்றோமே" என்று பன்மையாகச் சொல்லியிருப்பதனால் ஆளவந்தார் எம்பெருமானார் முதலான ஆசாரியர்களின் இயல்பையே சொல்லி நின்றாரென்பது விளங்கும். ஆசார்ய ஹ்ருதயத்தில் "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்" என்றருளிச் செய்திருப்பதை நிதியாகக் கொண்டே வேதாந்தவாரியர் இப்பாசுரமிட்டார். உடையவர் கீதாபாஷ்ய ஸ்ரீபாஷ்யாதிகளில் அறுதியிட்டருளின அர்த்தங்களில் விசேஷார்த்தங்களென்று கொண்டாடப்படுமவை யெல்லாம் திவ்யப்ரபந்த மூலகங்களே யாகும். அவையே ஸ்ரீவசநபூஷணதிரஹஸ்யங்களுக்கு உயிராயிருக்கும். அவையே வேதாந்த வாரியருடைய க்ரந்தங்களிலும் திலகமா யிருக்கும். ஸ்வகத ஸ்வீகார மென்றும் பரகதஸ்வீகார மென்றும் இரண்டு சொல்லுவதுண்டு. சேதநன் தான் எம்பெருமானைப் பற்றுவதானது ஸ்வகத ஸ்வீகாரமென்றும், எம்பெருமான் தானே சேதநனை வரிப்பதானது பரகத ஸ்வீகாரமென்றும் சொல்லப்படும். ஸ்வகத ஸ்வீகாரம் தவிர பரகத ஸ்வீகாரமென்பதே கிடையாதென்றும், அந்த வார்த்தையே பொருளற்றதென்றும், அஸம்ப்ரதாயப் பேச்சென்றும் தூஷித்துவருகின்ற நவீநர்கள் பகவத்பாஷ்யகார ஸ்ரீஸூக்தியையும் பார்த்தவர்களல்லர்; வேதாந்தவாரியருடைய க்ரந்தங்களையும் வாசித்தவர்களல்லர். கீதையில் (8—11) "अनन्यचेतास्सततं यो मां स्मरति नित्यशः। तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य देहिनः" ॥ என்கிற ச்லோகத்திற்கு ஸ்வாமியின் பாஷ்யபங்க்திகள் வருமாறு;—

" तस्य नित्ययुक्तस्य—नित्ययोगं कांक्षमाणस्य योगिनः, अहं सुलभः—अहमेव प्राप्यः। ........तद्वियोगमसहमानः अहमेव तं वृणे; मत्प्राप्त्यनुगुणोपासनविपाकं तद्विरोधिनिरसनम् अत्यर्थमत्प्रियत्वादिकं च अहमेव ददामीत्यर्थः। * यमेवैष वृणुते तेन लभ्यः * इति हि श्रूयते। वक्ष्यति च—* तेषां सततयुक्तानाम्....इति॥" என்று. இந்த கீதா பாஷ்ய ஸ்ரீஸூக்திகளின் பொருளாவது—என்னோடு எப்போதும் கூடியிருக்க வேணுமென்கிற விருப்பமுடையவனுக்கு அடையத் தகுந்தவன் நானேயாகிறேன். நான் அவனுடைய பிரிவைப் பொறுக்கமாட்டாதவனாய் [அவனைப் பிரிந்து தரித்திருக்கமாட்டாதவனாய்] நானே அவனை வரிக்கிறேன். என்னை யடைவதற்கான உபாஸநத்தின் பரிபக்குவ நிலைமையையும், அதற்குள்ள இடையூறுகள் நீங்குதலையும், என்னிடத்தில் அதிகமான ப்ரீதிமுதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். *நாயமாத்மா ச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமா யிருப்பதோடு இந்த கீதையிலே மேலே பத்தாவது அத்யாயத்தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப்படுகிறது—என்பதாம். இவ்வர்த்தமே ஸ்ரீவசநபூஷணத்தில் "அவன் இவனைப் பெற நினைக்கும்போது" இத்யாதியான பல சூர்ணைகளில் விசதீகரிக்கப்படுகிறது. அது நிற்க. கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை ஒவ்வொன்றாகவெடுத்து விமர்சிப்போம்:

[तद्वियोगमसहमानः अहमेव तं वृणे] ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெருமான் தான் பொறுத்திருக்கமாட்டாதவனாய் தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறுகின்றவிதுதான் பரகத ஸ்வீகாரமென்பது. திருவாய்மொழியில் * யானொட்டியென்னுள் இருத்துவ மென்றிலன், தானொட்டிவந்து என் தனி நெஞ்சை வஞ்சித்து * என்றும், * என்னில் முன்னம்பாரித்துத் தானென்னை முற்றப்பருகினான் * என்றுமுள்ள பாசுரங்களைத் தழுவியருளிச் செய்தது இது. இதற்கு மேல்,

[मत्प्राप्त्यनुगुणोपासनविपाकम् अहमेव ददामीत्यर्थः] இந்த வாக்கியமானது ஸ்வகத ஸ்வீகாரப் பற்றாசை நன்றாகக் கழிக்கிறது. இத்தலையில் விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தன் தலையாலே விளைவித்துக் கொள்ளுமது ஒன்றுமில்லை யென்கிற ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் தெளிவிக்கப்பட்டது. இந்த இடத்தில் * **நாயமாத்மா** ச்ருதியையும்

எடுத்துக்காட்டி யருளின பாஷ்யகாரர், பாகதஸ்வீகாரத்திற்கு அதுவே ப்ரமாணமென்று நிரூபிக்கிற முகத்தாலே பலருடைய ஆக்ஷேபங்களை ஸமாதாநம் பண்ணினாராயிற்று. இவ்விடத்தில் வேதாந்தாசாரியருடைய தாத்பர்ய சந்த்ரிகையில்— " उक्तस्य अतिवादमात्रत्वशङ्काव्युदसनाय श्रुतिमूलतामाह—* यमेवेति ॥ " என்று உள்ளது. இதனால் இரண்டு மஹார்த்தங்கள் நன்கு காட்டப்பட்டன: மேலே கீதாபாஷ்யத்தில் ஸாதித்த பொருளை அதிவாதமென்று சொல்லுகிறவர்களுமுளர் என்பதும், பாகதஸ்வீகாரமென்னுமிவ்வர்த்தம் * யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: * என்கிற ச்ருதியினால் தேறியதுதான் என்பதும்.

39. இப்படி ஸம்ஸ்க்ருதச்ருதியிலேயே ஸித்தமான இவ்வர்த்தத்திற்கு த்ராமிடோபநிஷத்ஸங்க்ரஹமும் எதற்காக? என்று சிலர் கேட்கக்கூடும். ஸம்ஸ்க்ருத ச்ருதியானது ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் போலே இதரமதஸ்தர்களுக்கு முள்ளதுதான். ஆனாலும் அவர்கள் அந்த ச்ருதியைக் கொண்டோ, அந்தச்ருதியின் சாயையான கீதையைக்கொண்டோ இப்படிப்பட்ட அர்த்தத்தைக் கண்டறியவுமில்லை, ஸ்வகோஷ்டியில் ப்ரவசநம் செய்வதுமில்லை. ஆழ்வாரருளிச் செயல்களில் ஆழ்ந்த ஆளவந்தார் எம்பெருமானார் போல்வார்க்கே இப்பொருளின் சுவை புலப்பட்டது. அதை வேதாந்தாசாரியர் ரஸித்து அநுபவிக்க பாக்யம் பெற்றார்; எதனாலே? பெரியவாச்சான்பிள்ளை போல்வாருடைய வியாக்கியானஸூக்திகளிலே அதிமாத்ரம் ஆழங்கால்படப் பெற்றதனாலே. இவ்விஷயத்தை விசத விசததர விசததமமாக அண்ணாஸ்வாமி தம்முடைய க்ரந்தங்களிலும் பத்ரிகைகளிலும் விவரிப்பதுபற்றியே நவீநர்கள் இவரிடத்தில் பகைகொண்டாட நேர்கின்றது. "யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷீ" என்பது இன்று நேற்றுண்டான வார்த்தையன்றே. ஸாஹஸகந்தமுமறியாத ப்ராமாணிகர்கள் அண்ணாஸ்வாமியின் அருமருந்தான நிரூபணங்களைக் கண்களிலன்றோ ஒற்றிக் கொள்ளுகிறார்கள்!

40. யதிராஜஸப்ததியில் ஆளவந்தாருக்குத் தனியாக " विगाहे यामुनं तीर्थं साधुवृन्दावने स्थितम्। निरस्तजिह्मगस्पर्शे यत्र कृष्णः कृतादरः ॥ " என்கிற ச்லோகமுள்ளது. இது ஆளவந்தாருக்கும் யமுநாதீர்த்தத்திற்கும் ச்லேஷமாக அமைந்தது. இதில் ஸபங்கச்லேஷமு முள்ளது,

அபங்கச்லேஷமு முள்ளது. (1) ஆளவந்தார்பரமானபோது யாமுநம் தீர்த்தம் என்றது யாமுநாசார்யரையென்றபடி. அவர் எப்படிப்பட்டவரென்னில்; [**ஸாதுப்ருந்தாவநே ஸ்திதம்**] ஸாதுப்ருந்த அவநே—பரமஸாத்விகர்களின் ஸமூஹத்தை ரக்ஷிப்பதில் ஊக்கமுடையவர். (2) யமுநாதீர்த்த மெப்படிப்பட்டதென்னில், ஸாது, ப்ருந்தாவநே ஸ்திதம் = ஸ்பஷ்டம். இனி உத்தரார்த்தம் [**நிரஸ்த ஜிஹ்மகஸ்பர்சே யத்ர க்ருஷ்ண: க்ருதாதர:**] யமுநா தீர்த்தபக்ஷத்தில், ஜிஹ்மகமாவது பாம்பு—காளியநாகம். அதனுடைய ஸ்பர்சம் நிரஸ்தமாகி, **க்ருஷ்ண: க்ருதாதர:**— நந்தகோபன் குமரனுன கண்ணபிரான் அங்கே ஆதரம் பண்ணியிருந்தானென்கிறது. (3) ஆளவந்தார் பரமாகப் பொருள் சொல்லும்போது [**நிரஸ்தஜிஹ்மகஸ்பர்சே யத்ர**] கபடபுத்தியுள்ளவர்களுக்கு ஜிஹ்மகர்களென்று பெயர்; அவர்களுடைய ஸம்பந்தமற்றவர் ஆளவந்தார். இவரிடத்திலே, **க்ருஷ்ண: க்ருதாதர:**—என்றதற்குப் பொருள் சொல்லவேண்டும். க்ருஷ்ண: என்பதற்குக் கண்ணன் என்கிற பொருளையே சொன்னுல் ச்லேஷத்திற்குச் சுவையாகாது. ஸர்வாத்மநா ச்லேஷமிருக்கவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை யென்று கொண்டாலும் ரஸ்யமாகச் சொல்லக்கூடிய பொருள் வேறு இருக்கும்போது அதை விடுவதற்கில்லை. ச்லேஷமர்யாதைக்குக் குறையின்றிக்கே, பெரியவாச்சான் பிள்ளைக்கு க்ருஷ்ண: என்று திருநாமமாகையாலே [ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய என்றிறே அவருடைய தனியன்] அவ்வாசிரியர் ஆளவந்தாருடைய ஸ்ரீஸூக்திகளுக்கு வியாக்கியானம் செய்தருளின முகத்தாலே அவரிடத்திலே ஆதராதிசயம் காட்டினவர் என்பதே இங்கு கவிக்கு விவக்ஷிதமான பரமார்த்தமென்று அண்ணங்கராரியர் உபபாதித்துக் காட்டுகிருர். அஸஹிஷ்ணுதையாலே இவ்வர்த்தத்தைப் பிறர் மறுக்கமுயன்று வீண் கோலாஹலங்கள் செய்தாலும் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளிலே வேதாந்தவாரியர் ஆழங்கால் பட்டிருக்கும்படியை அண்ணங்கராரியர் பலபல ப்ரமாணங்கள் காட்டியன்றே ஸ்தாபிக்கிருர். அவற்றுள் ஒன்றுக்குக் கூட பிறர் ஆர்ஜவத்துடன் விடையிறுத்திலரே.

41. சிகரமாக ஒரே விஷயம் கேண்மின் :—

“ திருவாய் மொழியில் பத்தாம்பத்தில் முதல் திருவாய் மொழி * தாளதாமரை யென்பது. இதில் திருமோகூரெம்பெருமானுடைய அநுபவம் நிகழ்கின்றது. இத்திருவாய்மொழிக்கு அவதாரிகை யிட்டருளின திருக்குருகைப் பிரான் பிள்ளான் ஆறுயிரப்படியில்—“ திருக்கண்ணபுரத்தி லெம்பெருமானை யநுபவித்து இப்போது திருமோகூரி லெம்பெருமானை யநுபவிக்கிறார் ” என்று இவ்வளவேயருளிச் செய்தார். மேற் பாசுரங்களிலும் ஸாதாரணமாகப் பாசுரப்பொருளே பணித்துள்ளார். மற்ற ஆசார்யர்களெல்லாரும் இங்கு ஒரு விசேஷ மருளிச்செய்கிறார்கள் ; அதாவது—ஆழ்வார், கீழ் * மாலைநண்ணித் திருவாய்மொழியில் * சரணமாகுமென்கிற பாசுரத்தில் தம்முடைய பரமபதயாத்திரையை நிச்சயித்து அர்ச்சிராதிமார்க்க கதியை யறுதியிட்டு அந்த கதிக்குத் திருமோகூர்க் காளமேகப் பெருமாளை வழித்துணையாகப் பற்றுகிறார் இத்திருவாய்மொழியில்— என்பதே. மணவாளமாமுனிகள் நூற்றந்தாதியில் * தாளடைந்தோர் தங்கட்குத் தானே வழித்துணையாம் ; காளமேகத்தைக் கதியாக்கி ” என்றருளிச் செய்தார். ஆசார்யஹ்ருதயத்தில் “ மார்க்கபந்து சைத்யம் மோஹனத்தே மடுவிடும் ” என்று பணிக்கப்பட்டது. பெரியவாச்சான்பிள்ளை யிருபத்திநாலாயிரப்படி முதலானவற்றிலும் ‘ காளமேகப் பெருமாளை வழித்துணையாகப் பற்றுகிறார் ’ என்றுள்ளது. இவ்விதமாக ப்ரமேயசிக்ஷை ஆறுயிரப்படியில் ஸூசனையாகக் கூட கிடையாதென்பது நிர்விவாதம். திருமோகூரப்பனை ஸ்தோத்ரம் பண்ணுகிறாரென்னுமித்தனையே ஆறுயிரப்படியிலுளது. இனி, தேசிகன் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவலியிலும் த்ரமிடோபநிஷத் ஸாரத்திலும் எவ்விதமாக அருளிச் செய்துளரென்று பார்க்கவேணும்.”

“ ரத்நாவளியில் (104) * தைத்யாநாமித்யாதி ச்லோகத்தில் “ श्रान्तिहारित्व-मुख्यैराकारैः सद्गतिस्स्याज्जलदतनुरुचिश्चेति तेनाभ्यधायि ” என்றார். * ஸத்கதிஸ ஸ்யாத் * என்பதற்கு வியாக்கியான மிட்டவர்கள் “காளமேகப் பெருமாளே வழித்துணை யென்று” என்றெழுதி வைத்தார்கள். த்ரமிடோப நிஷத்ஸாரத்திலும் இப்பதிகத்தில் தேறின குணமாக “ ஸத்பதவ்யாம் ஸஹாயம் ஸ்ரீசம் ப்ராஹ ” என்றருளிச்செய்தார். * ஸத் கதிஸ் ஸ்யாத் * என்ற தாத்பர்ய ரத்நாவளிக்கு * ஸத்பதவ்யாம் ஸஹாய மென்றவிது கை விளக்கா யிருக்கின்றது. இப்படி இன்னும் பலவிடங்கள் உண்டு ; ஸமயாந்தரே காட்டுவோம். தேசிகனுக்கு ஆறுயிரப்படியில் த்வேஷம் என்றோ வெறுப்பு என்றோ சொல்லுகிறோமல்லோம். அது மிகவும் சுருக்கமான வியாக்கியானமாயிருக்கிறபடியாலே அதை ஒருகால் ஸேவித்து நிறுத்தி பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் அதற்கு நான்கு மடங்கு விரிவாகவும் ரஸகனமாகவும் இருக்கிறதென்கிற காரணத்தினால் தேசிகன் இது தன்னையே நிதியாகக் கொண்டு இதையே காலக்ஷேபக்ரந்தமாக ஆதரித்து வந்தாரென்பதே தத்துவம்.”

42. இப்படி எந்த விஷயத்திலும் அண்ணாஸ்வாமியின் நிருபணம் அப்ரத்ருஷ்யமாகவன்றோ காண்கிறது. த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியை உள்ளபடி நிர்வஹிக்கவேணுமானால் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங் கொண்டல்லது நிர்வஹிக்கமுடியாதே. வெட்டவெளிச்சமான இவ்விஷயத்தில் வீண்

விவாதப்பட்டு பங்கமடைந்தவர்களுக்கு "नमः काञ्च्यै नमः काञ्च्यां दक्षिणस्यै च वीथये" என்றன்றோ அந்திதொழுஞ் சொல்லாகவுள்ளது.

43. வேதாந்தவாரியர் ஸ்ரீரங்கத்தில் இருந்துகொண்டு எத்தனையோ க்ரந்தங்கள் இயற்றினார். அவற்றின் முடிவில் இடாத விசேஷம் பகவத்த்யாந ஸோபாநத்தின் முடிவில்தான் இட்டிருக்கிறார். "ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே வித்வத்ஸேவாவிமலமநஸா வேங்கடேசேந" என்கிறார். ஸ்ரீரங்கத்தில் ரஸிகர்கள் எழுந்தருளியிருக்கிறார்களென்றும், அதனவ அந்த ஸ்ரீரங்கம் அசேஷஜநசித்தரஞ்ஜகமாயிருக்கிறதென்றும், அங்குள்ள வித்வான்களை ஸேவித்துத் தாம் விமலமநஸ்கராகப் பெற்றதாகவும் கூறுகிறார். கிடாம்பியப்புள்ளாரைக் காஞ்சீபுரியில் ஸேவித்ததைப்பற்றி இங்குக் கூறுகிறாரென்று சிலர் ஏறிடு மர்த்தம் எடுத்துக் கழிக்கவும் தகாதென்பதை அண்ணாஸ்வாமி ஸஹ்ருதய ஹ்ருதயங்கமமாக நிரூபித்திருக்கிறார். அர்த்த நிர்ணயத்தில் **ஔசித்யம்** என்பது ப்ரபலப்ரமாணம். அமலனாதிபிரானென்கிற திவ்யப்ரபந்தத்திற்குப் பர்யாயபூதமானது பகவத்த்யாநஸோபாநம். மற்ற ப்ரபந்தங்களிருக்க அமலனாதிபிரானுக்கு ஏன் வியாக்கியானமிட்டார் வேதாந்தவாரியர்? என்கிற விமர்சம் கிடக்கட்டும். அதன்முடிவில் என்ன பேசினாரென்று பார்க்கவேணும். "நாண் பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்று பேசினார். அஹங்காரத்தை அறவே விட்டு, ஸதுபதேசம் செய்யவல்ல மஹான்களை நாடுவதாகப் பேசினார். அந்த ப்ரபந்தத்திற்குப் பர்யாயபூதமான பகவத்த்யாந ஸோபாநத்தின் முடிவிலும் தத்பர்யாயமாகவே "**வித்வத்ஸேவா விமலமநஸா வேங்கடேசேந**" என்று பணித்தார். அதன் பொருளும் இதன் பொருளும் ஸமகண்டமாகவன்றோ இருக்கவடுக்கும். வீணான ஆக்ரஹத்தை விலக்கி மத்யஸ்த த்ருஷ்ட்யா பார்குமிடத்து அண்ணங்காரியர் ஆழ்ந்து ஆராய்ந்து உரைத்துள்ள அர்த்தங்கள் ஒன்றுதப்பாமல் யாவும் வேதாந்தவாரியருடைய திருவுள்ளத்தை உள்ளபடியுணர்ந்து பேசியவை என்று கொள்ளத் தகும்.

44. நம் அண்ணாஸ்வாமியின் ஆராய்ச்சிகள் ஏகதேசிகளின் உக்திகளைப் பற்றியே தோன்றியவை யல்ல; வேதாந்தவாரிய

ருடைய ஸ்ரீஸூக்திகளுக்கு மதாந்தரஸ்தர்கள் செய்யும் பொருள்களையும் விமர்சித்து, விவேகிகள் உகக்கக்கூடிய பொருள்களையும் காட்டி வருகிறார். அப்படிப்பட்டவற்றில் ஒன்றே இங்கெடுத்துக் காட்டுகிறேன்.

யாதவாப்யுதயத்தில் முதல் ஸர்க்கமுடிவில் ஒரு ச்லோகரத்னம்—

"आश्वास्य वागमृतवृष्टिभिरादितेयान् दैतेयभारनमितां धरणीं च देवीम् ।
आविर्बुभूषुरनघो वसुदेवपत्न्यां पद्मापतिः प्रणिदधे समयं दयायाः ॥ என்று.

பூபாரத்தையும் அஸுரோபத்ரவத்தையும் நீக்கும்படி பூமிதேவியாலும் தேவதைகளாலும் ப்ரார்த்திக்கப்பட்ட க்ஷீராப்திநாதன், அவர்களைத் தேத்தி யனுப்பி தான் ஸ்ரீதேவகிப் பிராட்டியாரிடம் பிறந்து தன் தயையை வெளிப்படுத்த உத்தேசித்தான் என்பது இதன் கருத்து. இதில் அநக: என்கிற விசேஷணம் பகவானுக்குள்ளது. அகில்ஹேய ப்ரத்யநீகன் என்று வேதாந்தங்கள் போற்ற நின்றவனுக்கு அகம் ஏது என்று சங்கைவரக்கூடும். இதன் வ்யாக்யானத்தில் அப்பய்ய தீக்ஷிதர் अनघः निरवद्यः, तत्तत्कर्मानुरोधितया वैषम्यनैर्घृण्यदोषरहितः என்று எழுதுகிறார். அவரவர்கள் செய்யும் புண்யபாபரூப கர்மங்களைப் பின் செல்பவனாதலால் வைஷம்யம்நைர்க்ருண்யம் என்கிற தோஷங்களில்லாதவன் என்று இதற்குப்பொருள். ஜகத்தை ஸ்ருஷ்டிக்கும் காலத்தில் இந்த தோஷசங்கை பண்ணி அதற்குப்பரிஹாரமாக இவ்வர்த்தம் சொல்லத்தகும். இது அந்தப்ரகரணமன்று. இது அவதாரப்ரகரணம். பிறப்புக்குக் காரணம் கர்மம். எம்பெருமான் அகர்மவச்யன். மேலும் எம்பெருமான் 'ஸமோஹம் ஸர்வபூதேஷு' என்கிறவன். இவனைத் துதிக்கிறவர்களும் देवानां दानवानां च सामान्यमधिदैवतम् என்றே துதிக்கிறார்கள். நான் ஸர்வபூதஸமன்—தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் பொதுவான தெய்வம்—என்றபடி. இப்படியிருக்க அநக: என்பதற்கு பொருத்தமான பொருள் வேறொன்றே சொல்லவேண்டும்; அது என்னவென்றால்:—பகவானுக்கு பிறப்பு கர்மத்தால் வந்ததல்ல. அவன் கருணையால் ஏறிட்டுக்கொண்டது. ஒரே கார்யம் ஒரு த்ருஷ்டியால் தோஷமாகும். மற்றொரு த்ருஷ்டியால் குணமாகும். சிறைக்கூடத்தில் குற்றவாளிகள் வாஸம் செய்வதுபோல் அதன் நிர்வாஹகர்களும் அங்கு வாஸம் செய்யக் காண்கிறோம். துக்காநுபவம் குற்றவாளிகளுக்கு. மற்றையோர்க்கில்லை. காரணபேதமே இதற்கு நியாமகம். தேவ ஜாதியில் ப்ரீதி அஸுரஜாதியில் பகை என்பதும் விபீஷணனையும் ப்ரஹ்லாதனையும் அநுக்ரஹித்த பகவானுக்கு இல்லை. விளக்கிலே விட்டில்கள் பேரலத்தாமாகவே மேல் விழுந்து அவரவர்கள் முடிகிறார்கள். ஆகவே அநக:—கர்மமடியாகவரும் பிறப்பு, பக்ஷபாதம் ஆகிய அகம் ஒன்றுமில்லாதவன் என்பதே பரமார்த்தம்—என்றுணர்க.

இச் சிறு நூலுக்கு அடியேனிட்ட மகுடத்திற்கு ஏற்ப இன்னும் பல நூற்றுக் கணக்கான விஷயங்கள் எழுதவேண்டியவையுண்டு. அவை இரண்டாம் பகுதியில் இடம் பெறுமென்று நிற்கின்றேன். ... ... ... ... *

முதற்பகுதி முற்றிற்று.

ரத்தினம் பிரஸ் (பிராஞ்ச்), 65, திருப்பள்ளி தெரு, சென்னை—1.